கருதியகம்புள்சம்பங்கோழியாங்கவுஞ்சமன்றில்
குருகுவண்டானமென்பகொய்யடிநாரையின்பேர்
பெருகியபிதாவேபோதாப்பெருநாரைசிகரியொன்றே
கருநிறநாரைவெள்ளைநாரைசாரசமென்றாமே. (௬௨)

மன்னுநீர்க்காக்கையர்க்கமற்றுங்காரண்டமும்பேர்
பன்னியகுரண்டங்கொக்காம்வலாகமும்பகமும்பேர்
உன்னமேகிராமமற்றையுற்குரோசத்தினோடு
கின்னரமின்னநீரிற்கிளர்ந்தெழுபறவையாமே. (௬௩)

அரியளிஞிமிறுமந்தியறுபதஞ்சிலீமுகஞ்சஞ்
சரிகமேசரகமேசஞ்சாளிகஞ்சுரும்புகீடம்
பிரமரமாவேகீதம்பிருங்கமேபிரசம்புள்ளு
வரிகொள்புண்டரீகந்தும்பிமதுபநாலைந்தும்வண்டாம். (௬௪)

கரும்புளேகேசவந்தேன்கண்டபெண்வண்டினாமம்
சுரும்பொடுமதுகரங்கள்சொற்றிடுந்தும்பியாண்பேர்
அருஞ்சிலாலாலமென்பசோர்விலஞ்சலிகைவாவல்
தருங்கோபமீயன்மூதாச்சரகமேபிரசந்தேனீ. (௬௫)

சிதடிசில்லிகையேசில்லைசிள்வீடுசிமிலியும்பேர்
பதமுறுசலபம்விட்டிற்பறவையாம்பதங்கமும்பேர்
விதமுறுநுளம்புதானேநிலத்திமின்மினிகச்சோதம்
கொதுகின்பேர்மசகந்துள்ளல்கூறின்மற்றசவலும்பேர். (௬௬)

## பறவையாண் பெண்மரபு.

மயிலெழாலல்லாப்புள்ளின்வகுத்தவாண்சேவலென்ப
மயிலெழாலெனுமிரண்டில்வாய்த்தவாண்போத்ததாகும்
அயர்வுறுகோழிகூகையல்லாப்பெண்ணளகென் * றோதார்
பெயர்பெறுமெல்லாப்புள்ளின்பெண்பெடைபெட்டைபேடை. ()

விகங்கமாசுகியேவீயேவிகிரமேகுடிஞைபக்கி
சகுந்தம்பத்திரிபதங்கந்தாழ்பிணிமுகத்தினோடு
பகர்ந்திடுங்ககமேகோலப்பறவையேபதகம்போகில்
புகழ்ந்திடுகுரீஇமூவைந்தும்புட்பொதுவயானமும்பேர். (௬௮)

---

* "கோழிகூகையல்லாப்பெண்ணளகென்றோதும்" என்றுபாடஞ்சொல்வாருமுளர். அது தொல்காப்பியப் பொருளதிகாரத்து மரபியலில் "கோழிகூகையாயிரண்டல்லவை, சூழுங்காலையளகெனலமையா" என்னும், ௫௫-ஞ் சூத்திரத்திற்கு மாறுபடுதலிற் பொருந்தாதென்க. மயிலின்பெண்ணும் அளகெனப்படும். அது "அப்பெயர்க்கிளவி மயிற்குமுரித்தே" என்னும், ௫௬-ஞ் சூத்திரத்தாலறிக.

சம்பங்கோழியின்பெயர்—கம்புள். க.
அன்றிலின்பெயர்—கவுஞ்சம். க.
கொய்யடிநாரையின்பெயர்—குருகு, வண்டானம். உ.
பெருநாரையின்பெயர்—பிதா, போதா. உ.
கருநாரையின்பெயர்-சிகரி.க.வெள்ளைநாரையின்பெயர்-சாரசம்.க.

நீர்க்காக்கையின்பெயர்—அர்க்கம், காரண்டம். உ.
கொக்கின்பெயர்—குரண்டம், வலாகம், பகம். ஙு.
நீர்வாழ்பறவையின்பெயர்—உன்னம், கிராமம், உற்குரோசம், கின்னரம். ச.

வண்டின்பெயர்—அரி, அளி, ஞிமிறு, மந்தி, அறுபதம், சிலீமுகம், சஞ்சரிகம், சரகம், சஞ்சாளிகம், சுரும்பு, கீடம், பிரமரம், மா, கீதம், பிருங்கம், பிரசம், புள், புண்டரீகம், தும்பி, மதுபம். உ0.

பெண்வண்டின்பெயர்—கரும்புள், கேசவம், தேன். ஙு.
ஆண்வண்டின்பெயர்—சுரும்பு, மதுகரம், தும்பி. ஙு.
அருஞ்சிலின்பெயர்-ஆலாலம்.க. வாவலின்பெயர்-அஞ்சலிகை. க.
இந்திரகோபத்தின்பெயர்—ஈயல், மூதா. * உ.
தேனீயின்பெயர்—சரகம், பிரசம். உ.

சிள்வீட்டின்பெயர்—சிதடி, சில்லிகை, சில்லை, சிமிலி. ச.
விட்டிற்பறவையின்பெயர்—சலபம், பதங்கம். உ.
நுளம்பின்பெயர்—கிலத்தி. க.
மின்மினியின்பெயர்—கச்சோதம். க.
கொதுகின்பெயர்—மசகம், துள்ளல், அசவல். ஙு.

## பறவையாண் பெண்மரபு.

மயிலும் எழாலுமல்லனவாகிய புள்ளினாண்பெயர்—சேவல். க.
மயில் எழாலென்னுமிரண்டினாண்பெயர்—போத்து. க.
கோழிகூகைகளின்பெண்பெயர்—அளகு. க.
பறவைப்பெண்ணின்பெயர்—பெடை, பெட்டை, பேடை. ஙு.

புட்பொதுவின்பெயர்—விகங்கம், ஆசுகி, வீ, விகிரம், குடிஞை, பக்கி, சகுந்தம், பத்திரி, பதங்கம், பிணிமுகம், கதம், பறவை, பதகம், போகில், குரீஇ, வயானம். கசு.

* ஈயன்மூதா என ஒருபெயராகக் கொள்வாருமுளர்.

சிறகொடுசதனம்வாசஞ்சிறைபிஞ்சங்கூரல்பக்கம்
பறைசதந்தூவிதோகைபத்திரங்குரலேகூழை
இறையெனவுரைத்தமூவைந்தேற்றதுமிறகின்பேரே
அறைதருமரிட்டங்கோசமண்டமேசினையேமுட்டை. (சுக)

பிள்ளையும்பார்ப்புங்குஞ்சின்பேர்சுச்சுச்சுவவுதுண்டம்
ஒள்ளியவலகுமூக்காமோசனிக்கின்றதென்ப
புள்ளெழச்சிறகடித்துப்புடைத்தலினுமமாகும்
துள்ளுபுள்ளீட்டத்தோசைதுழனியாங்தொழுதிகூட்டம். (எ0)

கலைசுறுமீனேறென்பகாட்டியமகரமாகும்
செலமுறுயானைமீனேதிமிபெருமீனுமம்
அலைவுறுதிமிங்கிலப்பேரானையைவிழுங்குமீனும்
மலைதிமிங்கிலகிலந்தான்மற்றதைவிழுங்குமீனே. (எக)

நலந்தருநந்துசுத்திநாகொடுவளைகம்புக்கோ
டிலங்கியவாரணம்வண்டிடம்புரிவெள்ளைசங்காம்
வலம்புரிநாமந்தானேவைத்தகொக்கரையென்றோதும்
சலஞ்சலம்பணிலமென்றுசாற்றினரேற்றநூலோர். (எஉ)

இப்பியாயிரமேசூழ்ந்ததிடம்புரியென்றகூறும்
ஒப்பில்சங்காயிரஞ்சூழுறுவலம்புரியென்றோதும்
அப்படியதுவுஞ்சூழ்ந்தசலஞ்சலமாகுமற்றைத்
தப்பிலாச்சலஞ்சலங்கள்சார்ந்ததுபாஞ்சசன்னியம். (எங)

இடங்கர்சிஞ்சுமாரம்வன்மீனெழிற்கராமுதலையின்பேர்
கொடுந்திறற்கராமற்றுண்பேர்கூர்மமேயுறுப்படக்கி
ஒடுக்குகச்சபமேயாமைகமடமுமுரைக்கற்பாற்றும்
மடங்கியதுளிபெண்ணைமமலங்கின்பேர்நூறைபென்ப. (எச)

ஏரலோடெருந்தேயூரல்கிளிஞ்சிலாமிறவிறுன்மீன்
ஆரலேயாராலின்பேர்கெண்டைமீன்சபரஞ்சேலாம்
ஊர்கருநந்தாநத்தைநாகுமாமுருவேயட்டை
நீருறுமயிலைமற்சநெடும்புழன்மீன்பொதுப்பேர். (எரு)

இறகின்பெயர்—சிறகு, சதனம், வாசம், சிறை, பிஞ்சம், கூரல், பக்கம், பறை, சதம், தூவி, தோகை, பத்திரம், குரல், கூழை, இறை. ௧௫.
முட்டையின்பெயர்—அரிட்டம், கோசம், அண்டம், சினை. ௪.

பறவைக்குஞ்சின்பெயர்—பிள்ளை, பார்ப்பு. ௨.
பறவைமூக்கின்பெயர்—சுச்சு, சுவவு, துண்டம், அலகு. ௪.
புட்சிறகடித்துப்புடைத்தலின்பெயர்—ஒசனித்தல். ௧.
புள்ளீட்டத்தினோசையின்பெயர்—துழனி. ௧.
பறவைக்கூட்டத்தின்பெயர்—தொழுதி. ௧.

மகரமீனின்பெயர்—கலை, சுறா, மீனேறு. ௩.
பெருமீனின்பெயர்—யானைமீன், திமி. ௨.
யானைமீனைவிழுங்குமீனின்பெயர்—திமிங்கிலம். ௧.
திமிங்கிலத்தைவிழுங்குமீனின்பெயர்—திமிங்கிலகிலம். ௧.

சங்கின்பெயர்—நந்து, சுத்தி, நாகு, வளை, கம்பு, கோடு, வாரணம், வண்டு, இடம்புரி, வெள்ளை. ௧௦.
வலம்புரிச்சங்கின்பெயர்—கொக்கரை. ௧.
சலஞ்சலத்தின்பெயர்—பணிலம். ௧.

இடம்புரி—இப்பியாயிரஞ்சூழ்ந்தது.
வலம்புரி—இடம்புரிச்சங்காயிரஞ்சூழ்ந்தது.
சலஞ்சலம்—வலம்புரியாயிரஞ்சூழ்ந்தது.
பாஞ்சசன்னியம்—சலஞ்சலங்களாயிரஞ்சூழ்ந்தது.

முதலையின்பெயர்—இடங்கர், சிஞ்சுமாரம், வன்மீன், கராம். ௪.
ஆண்முதலையின்பெயர்—கராம். ௧.
ஆமையின்பெயர்—கூர்மம், உறுப்படக்கி, கச்சபம், கமடம். ௪.
பெண்ணாமையின்பெயர்—துளி. ௧.
மலங்கின்பெயர்—நூறை. ௧.

கிளிஞ்சிலின்பெயர்—ஏரல், எருந்து, ஊரல். ௩.
இருண்மீனின்பெயர்—இறவு. ௧.
ஆரான்மீனின்பெயர்—ஆரல். ௧.
கெண்டைமீனின்பெயர்—சபரம், சேல். ௨.
நத்தையின்பெயர்--கருநந்து, நாகு.௨.அட்டையின்பெயர்--உரு. ௧.
மீன்பொதுப்பெயர்—மயிலை, மற்சம், புழல். ௩.

புள்ளியேகெவுளிபல்லிபோற்றுங்கோகிலமுமப்பேர்
நொள்ளைநாகரவண்டின்பேருலூதையேநோன்சிலம்பி
ஒள்ளியபிலஞ்சுலோபம்பிபீலிகையூரெறும்பாம்
தெள்ளுநாங்கூழ்பூநாகஞ்சிதலையேக்றையான்செல்லே. (எசு)

நளிவிடந்தெறுக்காறுட்டனுட்டியவிருச்சிகந்தேள்
களவனேகுளிரநள்ளிகவைத்தாள்கர்க்கடகஞெண்டே
உளுவுசுவாகுமென்பவுற்றமண்டூகந்தேரை
தளரரிநுணலைநீகந்தவளையாம்பேகமும்பேர். (எஎ)

கிருமியேபுழுப்பொட்டும்பேர்கீடங்கோற்புழுவுலண்டாம்
பிரசங்கோற்றேனிருலேபேசியதேனின்கூடாம்
விரவியவிலங்கினீட்டம்விருத்தமோரெழுபத்தெட்டும்
வருமுறையுரைத்தான்வீரைமன்னன்மண்டலவன்றனே. (எஅ)

விலங்கின்பெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆ. விருத்தம் — உஅரு.



நான்காவது

# மரப்பெயர்த்தொகுதி.

## காப்பு.

திருக்கிளர்தேவர்கோமானேவலிற்குபேரன்செய்த
விருப்புறுபொன்னெயிற்குள்விளங்கவெண்ணெழுத்திரண்டும்
பரப்பியவாதிமூர்த்திபங்கயப்பாதம்போற்றி
மரப்பெயர்த்தொகுதிதன்னைவருமுறைகூறலுற்றும். (க)

சந்தானம்வேண்டிற்றெல்லாந்தருமரிசந்தனம்பூ
மந்தாரம்பாரிசாதங்கற்பகமற்றோரைந்தாம்
சந்தாரஞ்சாந்துசாந்தஞ்சந்திரதிலகத்தோடு
வந்தேறுபடீரம்பூசுமலயசஞ்சந்தனப்பேர். (உ)

பல்லியின்பெயர்—புள்ளி; கெவுளி, கோகிலம். ௩.
நாகரவண்டின்பெயர்-நொள்ளை.க. சிலம்பியின்பெயர்-உலூதை.க.
எறும்பின்பெயர்—பிலஞ்சுலோபம், பிபீலிகை. உ.
நாங்கூழின்பெயர்—பூநாகம். க.
செல்லின்பெயர்—சிதலை, கறையான். உ.

தேளின்பெயர்-நளிவிடம்*, தெறுக்கால், துட்டன்,விருச்சிகம்.ச.
ஞெண்டின்பெயர்—களவன், குளிரம், நள்ளி, கவைத்தாள், கர்க்கடகம். ரு. உளுவின்பெயர்—உசு. க.
தவளையின்பெயர்—மண்டூகம்,தேரை,அரி,நுணலை,நீகம்,பேகம். சு.

புழுவின்பெயர்—கிருமி, பொட்டு. உ.
உலண்டின்பெயர்—கீடம், கோற்புழு. உ.
கோற்றேனின்பெயர்—பிரசம். க.
தேன்கூட்டின்பெயர்—இறால். க.



# பெயர்ப்பிரிவு.

இ-ள். திருக் கிளர் தேவர் கோமான் ஏவலில் குபேரன் செய்த விருப்பு உறு பொன் எயிற்குள்-அழகு நிறைந்த தேவர்க்கரசனாகிய இந்திரனது ஏவலினாலே குபேரன் இயற்றிய விருப்பம் பொருந்திய பொன்மதிற்குள் (எழுந்தருளியிருந்துகொண்டு)—எண் எழுத்து இரண்டும் விளங்கப் பரப்பிய - கணிதமும் இலக்கணமுமாகிய இரண்டையும் விளங்கும்படி பரப்பிய—ஆதிமூர்த்தி பங்கயப் பாதம் போற்றி - அருகக்கடவுளுடைய செந்தாமரை மலர்போலும் திருவடிகளைத் துதித்து,—மரப்பெயர்த் தொகுதி தன்னை வரும் முறை கூறலுற்றாம் - மரப்பெயர்த்தொகுதியை வருமுறையே (யாம்) சொல்லலுற்றாம். எ - று.

ஐந்தருவாவன—சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம். ரு.
சந்தனமரத்தின்பெயர்—சந்து, ஆரம், சாந்து, சாந்தம், சந்திரதிலகம், படீரம், மலயசம். எ.

* நளி, விடம் என இருபெயராகக் கொள்வாருமுளர்.

மகிழுமக்கற்பகத்தில்வளர்கொடிகாமவல்லி
அகருவேகாகதுண்டமகிலென்பநூழிலும்பேர்
பகரும்புன்காலியோடுபாடலம்பாதிரிப்பேர்
வகுளமேயிலஞ்சியென்யமகிழாங்கேசரமுமாமே. (ங)

மன்னியகோங்கிணுமம்வருந்தருமோற்பலம்பூங்
கன்னிகாரமுமாமென்பசம்பகஞ்சண்பகப்பேர்
புன்னைபுன்னாகநாகம்வழைசுரபுன்னைப்பேரே
நன்னிறநரந்தநாரநாரங்கநாரத்தைப்பேர். (ச)

குருகுநாகரிவாசந்திமாதவிகுருக்கத்திப்பேர்
தருசிறுசண்பகப்பேர்சாதிமாலதியுமாகும்
கருமுகைபித்திகைப்பேர்திலகமஞ்சாடிகாட்டும்
மருகுதான்மகரவாழைவனமல்லிகைப்பேர்மௌவல். (ரு)

மல்லிகையேபூருண்டிமாலதியனங்கமும்பேர்
அல்லிபுன்காலிகாசையஞ்சனிபூவைகாயாக்
குல்லையேசெச்சைவெட்சிகொந்தார்சிந்தூரமும்பேர்
குல்லைபூந்துளவினோடுதுழாய்வனந்துளசிகூறும். (சு)

செங்கோடுபஞ்சரந்தான்செருந்தியேபொருந்திநிற்கும்
அங்கோலஞ்சேவழிஞ்சில்சேமரமென்றுமாகும்
கொங்காருந்தருக்கமென்பகுங்குமமரவமும்பேர்
அங்கானவனிச்சந்தானேயருப்பலநறவஞ்சுள்ளி. (எ)

கரவீரங்கவீரமற்றைக்கணவீரமலரியின்பேர்
விரைமேவுதமனகந்தான்மேவியமருக்கொழுந்தே
இருவேலிமூலகந்தம்வேரிபீதகமுமேற்கும்
மருமேவுமிருவாட்சிக்குமயிலையுமனங்கமும்பேர். (அ)

முண்டகமுடங்கல்கைதைமுசலியேமடியேதாழை
கண்டல்கேதகையுமப்பேர்பறிவைப்ட்டிகையேகாட்டும்
வண்டுளர்வலம்புரிப்பேர்நந்தியாவர்த்தமென்ப
விண்டபூஞ்செவ்வரத்தமேவுமந்தாரமாமே. (கூ)

தாலமேபெண்ணைபுல்லுத்தாளிபுற்பதிபனைப்பேர்
தாலமேகூந்தற்பூகந்தருகந்திபூகம்பூக்கம்
சாலநீள்கமுகுமுப்பேர்சாற்றிடுந்துவர்க்காய்பாகு
கோலமென்றிந்தமூன்றுங்குறித்தபாக்கிற்குநாமம். (க0)

கற்பகதருவிற்படர்கொடியின்பெயர்—காமவல்லி. க.
அகிலின்பெயர்—அகரு, காகதுண்டம், பூழில். ங.
பாதிரிமரத்தின்பெயர்—புன்காலி, பாடலம். உ.
மகிழமரத்தின்பெயர்—வகுளம், இலஞ்சி, கேசரம். ங.

கோங்குமரத்தின்பெயர்—துருமோற்பலம், கன்னிகாரம். உ.
சண்பகமரத்தின்பெயர்—சம்பகம். க.
புன்னைமரத்தின்பெயர்—புன்னாகம், நாகம். உ.
சுரபுன்னையின்பெயர்—வழை. க.
நாரத்தையின்பெயர்—நரந்தம், நாரம், நாரங்கம். ங.

குருக்கத்தியின்பெயர்—குருகு, நாகரி, வாசந்தி, மாதவி. ச.
சிறுசண்பகத்தின்பெயர்—சாதி, மாலதி. உ.
பித்திகையின்பெயர்-கருமுகை.க. மஞ்சாடியின்பெயர்-திலகம். க.
மகரவாழையின்பெயர்—மருகு. க.
வனமல்லிகையின்பெயர்—மௌவல். க.

மல்லிகையின்பெயர்—பூருண்டி, மாலதி, அனங்கம். ங.
காயாவின்பெயர்—அல்லி, புன்காலி, காசை, அஞ்சனி, பூவை. ரு.
வெட்சியின்பெயர்—குல்லை, செச்சை, சிந்தூரம். ங.
துளசியின்பெர்—குல்லை, துளவு, துழாய், வனம். ச.

செருந்திமரத்தின்பெயர்—செங்கோடு, பஞ்சரம். உ.
அழிஞ்சிலின்பெயர்—அங்கோலம், சே, சேமரம். ங.
குங்குமமரத்தின்பெயர்—துருக்கம், மரவம். உ.
அனிச்சமரத்தின்பெயர்—அருப்பலம், நறவம், சுள்ளி. ங.

அலரியின்பெயர்—கரவீரம், கவீரம், கணவீரம். ங.
மருக்கொழுந்தின்பெயர்—தமனகம். க.
இருவேலியின்பெயர்—மூலகந்தம், வேரி, பீதகம். ங.
இருவாட்சியின்பெயர்—மயிலை, அனங்கம். உ.

தாழையின்பெயர்—முண்டகம், முடங்கல், கைதை, முசலி, மடி, கண்டல், கேதகை. எ. பட்டிகையின்பெயர்—பறிவை. க.
நந்தியாவர்த்தத்தின்பெயர்—வலம்புரி. க.
செவ்வரத்தத்தின்பெயர்—மந்தாரம். க.

பனையின்பெயர்—தாலம், பெண்ணை, புல், தாளி, புற்பதி. ரு.
கூந்தற்பூகத்தின்பெயர்—தாலம். க.
கமுகின்பெயர்—கந்தி, பூகம், பூக்கம். ங.
பாக்கின்பெயர்—துவர்க்காய், பாகு, கோலம். ங.

பனசமேவருக்கைபாகல்பலவிவைபலாவின்பேரே
அணையவீரப்பலாவேயாசினியென்பதாகும்
வினவியமாந்திசூதமேவுமாமிரமேகொக்கே
சினைபடுமாழைமாவாஞ்சேதாரந்தேமாவின்பேர். (கக)

தாழைதென்னளிகேரமிலாங்கலிதாந்தெங்கின்பேர்
சூழுநெய்யரிபன்னாடைசொல்லியநாரியும்பேர்
வாழையேகதலியாகுமற்றரம்பையுமதன்பேர்
வேழமேகன்னலிக்குமென்கழைகரும்புநாற்பேர். (கஉ)

காம்புபாதிரிமுடங்கல்கழைபணைவிண்டுநேமி
தூம்புவேய்தட்டைமுந்தூழ்துளைகிளைமுளையேவேணு
ஆம்பல்கீசகம்வேல்வேரலரியமைதிகிரிவேழம்
மேம்படுவரைமூவெட்டுமூங்கிலாம்வெதிருமப்பேர். (கங)

வடமுடனியக்குரோதம்பூதங்கான்மரம்வானோங்கிப்
படருந்தொன்மரமேகோளிபழுமரமாலின்பேரே
குடசம்வெட்பாலையென்பகிரிமல்லிகையுமேகூறும்
உடையென்பகுடைவேலாகுமுழுகரஞ்சகமேபுன்கு. (கச)

விரைசெறிசெயலைபிண்டிமேவுகாகோளிமூன்றும்
அருகனெம்மானிருந்தேயறம்பகரசோகின்பேராம்
அரசின்பேர்சுவலைகுஞ்சராசனமச்சுவத்தம்
திருமரம்பணையேபோதிகணவம்பிப்பலமும்செப்பும். (கரு)

சிந்தகமாமிலஞ்சிந்தூரமேயெகின்புளிப்பேர்
திந்திடீகமுமப்பேரேதேக்கின்பேர்சாகஞ்சாதி
வந்தெழுமிதழிதாமமதலையேகடுக்கைகொன்றை
முந்துகிஞ்சுகத்தினோடுகவிருமுண்முருக்கினாமம். (கசு)

சம்புநேரேடுநாவல்சாதேவங்குழிநாவற்பேர்
நிம்பமேவேம்பினுமரீள்பிசுமர்த்தமும்பேர்
சம்பீரமுருகினோடுசதாபலமெலுமிச்சைப்பேர்
அம்புவியிலிகுசத்தோடருணஞ்சம்பளமுநாட்டும். (கஎ)

அதவுடனுதும்பரங்கள்கோளியேயதமேயத்தி
இதமுறுமாழைசிஞ்சமெகின்மூன்றும்புளிமாவின்பேர்
வதரிகோற்கொடியிலந்தைவளர்கோலிகுவலியும்பேர்
விதமுறுகோலங்கோண்டைவினவிலக்கனியின்பேரே. (கஅ)

பலாமரத்தின்பெயர்—பனசம், வருக்கை, பாகல், பலவு. ச.
ஈரப்பலாவின்பெயர்—ஆசினி. க.
மாமரத்தின்பெயர்—மாந்தி, சூதம், ஆமிரம், கொக்கு, மாழை. ரு.
தேமாவின்பெயர்—சேதாரம்,[சககாரம்] க.

தெங்கின்பெயர்—தாழை, தென், நாளிகேரம், இலாங்கலி. ச.
பன்னாடையின்பெயர்—நெய்யரி, நாரி. உ.
வாழையின்பெயர்—கதலி, அரம்பை. உ.
கரும்பின்பெயர்—வேழம், கன்னல், இக்கு, கழை. ச.

மூங்கிலின்பெயர்—காம்பு, பாதிரி, முடங்கல், கழை,பணை,விண்டு, நேமி, தூம்பு, வேய், தட்டை, முந்தூழ், துளை, கிளை, முளை, வேணு, ஆம்பல், கீசகம், வேல், வேரல், அரி, அமை, திகிரி, வேழம், வரை, வெதிர். உரு.

ஆலமரத்தின்பெயர்—வடம், நியக்குரோதம், பூதம், கான்மரம், தொன்மரம், கோளி, பழுமரம். எ.
வெட்பாலையின்பெயர்—குடசம், கிரிமல்லிகை. உ.
குடைவேலின்பெயர்-உடை.க.புன்கமரத்தின்பெயர்-கரஞ்சகம்.க.

அசோகமரத்தின்பெயர்—செயலை, பிண்டி, காகோளி. ௩.
அரசமரத்தின்பெயர்—சுவலை, குஞ்சராசனம், அச்சுவத்தம், திருமரம், பணை, போதி, கணவம், பிப்பலம். அ.

புளியமரத்தின்பெயர்—சிந்தகம், ஆமிலம், சிந்தூரம், எகின், திந்திடீகம். ரு. தேக்கின்பெயர்—சாகம், சாதி. உ.
கொன்றையின்பெயர்—இதழி, தாமம், மதலை, கடுக்கை. ச.
முண்முருக்கின்பெயர்—கிஞ்சுகம், கவிர். உ.

நாவலின்பெயர்-சம்பு,நேரேடு.உ.குழிநாவலின்பெயர்-சாதேவம்க
வேம்பின்பெயர்—நிம்பம், பிசுமர்த்தம். உ.
எலுமிச்சையின்பெயர்—சம்பீரம், முருகு, சதாபலம், இலிகுசம், அருணம், சம்பளம். சு.

அத்திமரத்தின்பெயர்—அதவு, உதும்பரம், கோளி, அதம். ச.
புளிமாவின்பெயர்—மாழை, சிஞ்சம், எகின். ௩.
இலந்தையின்பெயர்—வதரி, கோற்கொடி, கோலி, குவலி. ௩.
இலந்தைக்கனியின்பெயர்—கோலம், கோண்டை. உ.

மாதுளமாதுளுங்கங்கமுமுளேமாதுளைப்பேர்
தாதுமாதுளேயினுமந்தாடிமமென்றேசாற்றும்
சாதிவேத்திரமேசூரல்சாற்றியபிரம்புமுப்பேர்
தாதகியாத்தியாரேசல்லகியெல்லாமொன்றும். (கக)

சில்லமேயில்லந்தேற்றுஞ்சிரீடமேபாண்டில்வாகை
வில்லமாலூரமேகூவிளமிவைவில்வப்பேரே
புல்லியபசுநாவிட்டில்புக்கிலைபராயின்பேரே
பல்லிணர்க்கிலுகிலுப்பைபகன்றையாமுலவையோடை. (உ0)

குரவகமென்பவாடாக்குறிஞ்சியாங்குரண்டகந்தான்
பெருகியகுறிஞ்சியாகும்பேரீந்தின்பேர்கர்ச்சூரம்
குரவமேகோட்டமென்பமழைவண்ணக்குறிஞ்சிபாணம்
தருகரமஞ்சரிப்பேர்சாற்றுநாயுருவியாமே. (உக)

தளவுமாகதியேமௌவல்யூதிகைமுல்லைசாற்றும்
களவென்பகளாவினுமங்கதிரமேகருங்காலிப்பேர்
விளவொடுகபித்தம்வெள்ளில்விளாக்கடிப்பகையினோடு
விளையுமையவிசித்தார்த்தம்வெண்சிறுகடுகிம்முப்பேர். (உஉ)

மருதுபூதவத்தினோடுமற்றருச்சுனமுமேற்கும்
பெருகியகணியும்பீதசாலமுந்திமிசும்வேங்கை
திருமிகுமதுரசங்கோத்தனியேமுந்திரிகையாகும்
வருமதிமதூரம்யட்டிமதுகமேயதிங்கமென்ப. (உங)

காந்தள்செங்காந்தள்பற்றையிலாங்கலிதோன்றியும்பேர்
காந்துகங்கோடல்கோடைகருதுவெண்காந்தளாகும்
பூந்துணர்ப்பலாசுதானேபுனமுருக்கின்பேரென்ப
சாய்ந்தெழுசமியேவன்னிநறுவின்பேர்தணக்குத்தானே. (உச)

குந்தமேகுருந்தமென்பகுமிழ்கூம்பல்குஞ்சங்குன்றி
இந்துளமராகதம்பமியைந்தநீபங்கடம்பாம்
சிந்துவாரந்நிர்க்குண்டிசெப்பில்வெண்ணொச்சியாகும்
தந்தசத்திக்கொடிப்பேர்தாடிமஞ்சந்தானுமே. (உரு)

அரிதகிபத்தியங்கள்கடுவேயாமலகநெல்லி
கருதியதான்றிதானேகலித்தருமந்தானுகும்
பரவுமாகதிகாமன்றிப்பலியென்பகலினியும்பேர்
உருளரிசிப்பேர்கொத்துமலியெனவுரைக்கலாமே. (உசு)

மாதுளையின்பெயர்—மாதுளம், மாதுளுங்கம், கழுமுள். ௩.
தாதுமாதுளையின்பெயர்—தாடிமம். ௧.
பிரம்பின்பெயர்—சாதி, வேத்திரம், சூரல். ௩.
ஆத்தியின்பெயர்—தாதகி, ஆர், சல்லகி. ௩.

தேற்றுமரத்தின்பெயர்—சில்லம், இல்லம். ௨.
வாகைமரத்தின்பெயர்—சிரீடம், பாண்டில். ௨.
வில்வமரத்தின்பெயர்—வில்லம், மாலூரம், கூவிளம். ௩.
பராய்மரத்தின்பெயர்—பசுநா, விட்டில், புக்கு. ௩.
கிலுகிலுப்பையின்பெயர்-பகன்றை.௧.ஒடையின்பெயர்-உலவை.௧.

வாடாக்குறிஞ்சியின்பெயர்-குரவகம்.௧. குறிஞ்சியின்பெயர்—குராண்டகம். ௧. பேரீந்தின்பெயர்-கர்ச்சூரம். ௧. கோட்டத்தின்பெயர்—குரவம். ௧. மழைவண்ணக்குறிஞ்சியின்பெயர்—பாணம். ௧. நரயுருவியின்பெயர்—கரமஞ்சரி. ௧.

முல்லையின்பெயர்—தளவு, மாகதி, மௌவல், யூதிகை. ௪.
களாவின்பெயர்—களவு. ௧. கருங்காலியின்பெயர்—கதிரம். ௧.
விளாவின்பெயர்—விளவு, கபித்தம், வெள்ளில். ௩.
வெண்கடுகின்பெயர்—கடிப்பகை, ஐயவி, சித்தார்த்தம். ௩.

மருதமரத்தின்பெயர்—பூதவம், அருச்சுனம். ௨.
வேங்கைமரத்தின்பெயர்—கணி, பீதசாலம், திமிசு. ௩.
முந்திரிகையின்பெயர்—மதுரசம், கோத்தனி. ௨.
அதிமதுரத்தின்பெயர்—யட்டி, மதுகம், அதிங்கம். ௩.

செங்காந்தளின்பெயர்--காந்தள், பற்றை, இலாங்கலி, தோன்றி. ௪.
வெண்காந்தளின்பெயர்—காந்துகம், கோடல், கோடை. ௩.
புனமுருக்கின்பெயர்—பலாசு. ௧.
வன்னியின்பெயர்—சமி. ௧. நுணவின்பெயர்—தணக்கு. ௧.

குருந்தமரத்தின்பெயர்—குந்தம். ௧.
குமிழின்பெயர்—கூம்பல். ௧. குன்றியின்பெயர்—குஞ்சம். ௧.
கடம்பின்பெயர்—இந்துளம், மரா, கதம்பம், நீபம். ௪.
வெண்ணொச்சியின்பெயர்—சிந்துவாரம், நிர்க்குண்டி. ௨.
சத்திக்கொடியின்பெயர்—தாடிமஞ்சம். ௧.

கடுமரத்தின்பெயர்—அரிதகி, பத்தியம். ௨.
நெல்லியின்பெயர்-ஆமலகம்.௧.தான்றியின்பெயர்-கலித்துருமம்.௧.
திப்பலியின்பெயர்—மாகதி, காமன், கலினி. ௩.
கொத்துமலியின்பெயர்—உருளரிசி. ௧.

கன்னிகாக்கணமிரண்டுங்கருவிளைகிகிணியும்பேர்
முன்னமேதுரிஞ்சிலின்பேர்மொழிந்தசீக்கிரியுமாகும்
மன்னியவாடாதோடைவாசையென்றறையலாமே
பன்னல்கார்ப்பாசமின்னபருத்தியின்பெருத்தநாமம். (உஎ)

இத்தியேசுவியிரத்தியிரத்திரியிறலியாகும்
சித்திரகம்மேரண்டஞ்சிறந்தவாமணக்கினுமம்
வைத்திடுமிருப்பைதானேமதுகமாங்குலிகமும்பேர்
கைத்தகோடரமேகாஎங்காஞ்சிரைமுட்டியெட்டி. (உஅ)

செங்கருங்காலிநாமஞ்சிறுமாரோடந்தானுகும்
தங்கியசாலஞ்சுள்ளிமராமரமாவேயாச்சா
பொங்கர்சான்மலியிலுேடுபூரணியிலவமுப்பேர்
வங்கமேவழுதலைப்பேர்வழுதுணையென்றுமாமே. (உகூ)

கழலினுமங்கர்ச்சூரங்கழற்காயேகழங்குமற்று
முழலுமாங்கற்றுழைப்பேர்முதிர்விலாக்குமரிகன்னி
இழைவுறுபுலிதொடக்கியிண்டுவாமீகையீங்கை
உழிஞையேசிறுபூளைப்பேருன்மத்தமுமத்தைப்பேர். (௩0)

அச்சமேமுனிகரீரமகத்தியாமெருக்கருக்கம்
பச்சிலைமரந்தமாலம்பசும்பிடியென்றும்பேரே
சுச்சுவேசுண்டியென்பசமங்கையேவறட்சுண்டிப்பேர்
வச்சிராங்கங்கண்டீர்வம்வச்சிரஞ்சதுரக்கள்ளி. (௩க)

பல்லிணர்க்குளவிதானேமலைப்பச்சைபலினிஞாழல்
சில்லியேமேகநாதஞ்சாகினிசிறுகீரைப்பேர்
சொல்லியசகுடஞ்சேம்பாஞ்சூழ்ந்தநாளிகமேவள்ளை
நல்லநந்தைப்பேர்கொத்தானறுவிலியலியென்றுமே. (௩உ)

திரிபுரிசாறடைப்பேர்சிறந்தகூதளங்கூதாளி
விரவியவுருவாரந்தான்வெள்ளரிவிளங்குநாமம்
கருதுகக்கரிவாலுங்கிகண்டுதிகாஞ்சொறிப்பேர்
பரவுமஞ்சிகமேதாளிபகன்றையாஞ்சிவேதைதானே. (௩௩)

ஏலமாந்துடியோடாஞ்சியிரண்டுமேயிசங்கினுக்குக்
கோலுமுத்தாபலம்பேர்குண்டலியென்றுமாகும்
கூலமேகாரவல்லிகூறியபாகலின்பேர்
பாலையின்பேர்சீவந்திசீவனியென்றும்பன்னும். (௩௪)

கருவிளையின்பெயர்—கன்னி, காக்கணம், கிகிணி. ந.
துரிஞ்சிலின்பெயர்—முன்னம், சீக்கிரி. உ.
ஆடாதோடையின்பெயர்—வாசை. க.
பருத்தியின்பெயர்—பன்னல், கார்ப்பாசம். உ.

இத்தியின்பெயர்—சுவி, இரத்தி, இரத்திரி, இறலி. ச.
ஆமணக்கின்பெயர்—சித்திரகம், ஏரண்டம். உ.
இருப்பையின்பெயர்—மதுகம், குலிகம். உ.
எட்டியின்பெயர்—கோடரம், காளம், காஞ்சிரை, முட்டி. ச.

செங்கருங்காலியின்பெயர்—சிறுமாரோடம். க.
ஆச்சாமரத்தின்பெயர்—சாலம், சுள்ளி, மராமரம், ஆ. ச.
இலவமரத்தின்பெயர்—பொங்கர், சான்மலி, பூரணி. ந.
வழுதலையின்பெயர்—வங்கம், வழுதுணை. உ.

கழற்கொடியின்பெயர்—கர்ச்சூரம். க. கழற்காயின்பெயர்—கழங்கு, முழல். உ. கற்றாழையின்பெயர்—குமரி, கன்னி. உ.
புலிதொடக்கியின்பெயர்—இண்டு.க. ஈங்கையின்பெயர்—ஈங்கை.க.
சிறுபூளையின்பெயர்-உழிஞை.க. ஊமத்தையின்பெயர்-உன்மத்தம்.

அகத்தியின்பெயர்—அச்சம், முனி, கரீரம். ந. எருக்கின்பெயர்—அருக்கம். க. பச்சிலைமரத்தின்பெயர்—தமாலம், பசும்பிடி. உ.
சுண்டியின்பெயர்—சுச்சு.க. வறட்சுண்டியின்பெயர்—சமங்கை.க.
சதுரக்கள்ளியின்பெயர்—வச்சிராங்கம், கண்டீரவம், வச்சிரம்.ந.

மலைப்பச்சையின்பெயர்—குளவி. க. ஞாழலின்பெயர்—பலினி.க.
சிறுகீரையின்பெயர்—சில்லி, மேகநாதம், சாகினி. ந.
சேம்பின்பெயர்—சகுடம். க. வள்ளையின்பெயர்—நாளிகம். க.
கொத்தான்பெயர்—நந்தை. க. நறுவிலியின்பெயர்—அலி. க.

சாறடையின்பெயர்—திரிபுரி. க. கூதாளியின்பெயர்—கூதளம். க.
வெள்ளரியின்பெயர்—உருவாரம். க.
கக்கரியின்பெயர்-வாலுங்கி.க. காஞ்சொறியின்பெயர்-கண்டூதி. க.
தாளியின்பெயர்—மஞ்சிகம். க. சிவேதையின்பெயர்-பகன்றை. க.

ஏலத்தின்பெயர்—துடி, ஆஞ்சி. உ.
இசங்கின்பெயர்—முத்தாபலம், குண்டலி. உ.
பாகலின்பெயர்—கூலம், காரவல்லி. உ.
பாலைமரத்தின்பெயர்—சீவந்தி, சீவனி. உ.

விம்பமேதொண்டைகொவ்வைபசிரிபாவிரிதுரோணம்
தும்பையேயலாபுமற்றைச்சுரைநூழில்கொடிக்கொத்தானும்
கொம்பர்சேர்முருங்கையேசிக்குருவடகிலைக்கறிப்பேர்
பம்பியபீரம்பீர்க்காம்படலிகைபெரும்பீர்க்காமே. (௩௫)

பரவுபாற்சொற்றிநாமம்பாயசமென்றுகூறும்
விரவியவமுதவல்லிமேயசீவந்திசீந்தி
மருவியவிலதைவள்ளிவல்லிவண்கொடிமுப்பேராம்
சரமொடுகாசைகாசஞ்சாற்றிடுநாணலின்பேர். (௩௬)

நறியதாம்பூலவல்லிதாம்பூலிநாகவல்லி
செறிதருமிலைக்கொடிப்பேர்கிரையன்மெல்லிலையுமாகும்
கறியொடுமரீசங்காயங்கலினைகோளகந்திரங்கல்
செறிதருமிளகினுமமிரியலுஞ்செப்பலாமே. (௩௭)

வரிசொல்லுவிரீகிசாலிவளர்நெல்லாம்யவமுமாகும்
தெரியுநன்னெல்லினோடுசெஞ்சாலிசெந்நெல்லின்பேர்
பரியும்பைங்கூழ்பசும்புல்பயிர்கதிர்குரலோடேனல்
பெருகியவிளஞ்சூல்பீட்டைபீளிளங்கதிரின்பேரே. (௩௮)

பழுதறுபதரின்பேரேபதடியாம்போரேசும்மை
பொழியத்தூற்றாதநெல்லின்பொலியேபொங்கழியென்றாகும்
தழுவுகோதுமையேகோதிதண்டுலமரிசிதானே
வழுதலைப்பலாலம்வைக்கோன்மலைநெல்லைவனமேவைக்கும். ()

தந்தவேயரிசிதோரைகுளநெல்லுத்தானீவாரம்
செந்தினைகவலைகம்பாந்தினையின்பேரேனலென்ப
யைந்தினைதானுமேனல்பகர்ந்திடுங்கருந்தினைப்பேர்
அந்தமாமிறடிகங்கேயருவியுமிருவியுந்தாள். (௪0)

துவரையாடகமேயாமஞ்சூரமேகடலையின்பேர்
அவரைசிக்கடியேசிம்பையழுந்தியவுழுந்துமாடம்
கவர்தருபயறுமுற்கங்காணமேகுலத்தங்கொள்ளாம்
இவையெலாமுதிரைகூலமிதைகாராமணியினமம். (௪௧)

கொவ்வையின்பெயர்—விம்பம், தொண்டை. உ.
பசிரியின்பெயர்—பாவிரி. க. தும்பையின்பெயர்—துரோணம். க.
சுரையின்பெயர்-அலாபு. க. கொடிக்கொத்தான்பெயர்-நூழில். க.
முருங்கையின்பெயர்-சிக்குரு. க. இலக்கறியின்பெயர்-அடகு. க.
பீர்க்கின்பெயர்—பீரம். க. பெரும்பீர்க்கின்பெயர்—படலிகை. க.

பாற்சொற்றியின்பெயர்—பாயசம். க.
சீந்திக்கொடியின்பெயர்—அமுதவல்லி, சீவந்தி. உ.
கொடியின்பெயர்—இலதை, வள்ளி, வல்லி. ௩.
நாணலின்பெயர்—சரம், கர்சை, காசம். ௩.

வெற்றிலைக்கொடியின்பெயர்—தாம்பூலவல்லி, தாம்பூலி, நாகவல்லி, திரையல், மெல்லிலை. ௫.
மிளகின்பெயர்—கறி, மரீசம், காயம், கலினை, கோளகம், திரங்கல், மிரியல். ௭.

நெல்லின்பெயர்—வரி, சொல், விரீகி, சாலி, யவம். ௫.
செந்நெல்லின்பெயர்—நன்னெல், செஞ்சாலி. உ.
பயிரின்பெயர்—பைங்கூழ், பசும்புல். உ.
கதிரின்பெயர்-குரல், ஏனல். உ. இளஞ்சூலின்பெயர்-பீட்டை. க.
இளங்கதிரின்பெயர்—பீள். க.

பதரின்பெயர்—பதடி. க. நெற்போரின்பெயர்—சும்மை. க.
ஆற்றுதநெற்பொலியின்பெயர்—பொங்கழி. க.
கோதுமையின்பெயர்—கோதி. க. அரிசியின்பெயர்—தண்டுலம். க.
வைக்கோலின்பெயர்—வழுது, வை, பலாலம். ௩.
மலைநெல்லின்பெயர்—ஐவனம். க.

வேயரிசியின்பெயர்-தோரை. க. குளநெல்லின்பெயர்-நீவாரம். க.
கம்பின்பெயர்—செந்தினை, கவலை. உ.
தினையின்பெயர்—ஏனல். க. பைந்தினையின்பெயர்—ஏனல். க.
கருந்தினையின்பெயர்—இறடி, கங்கு. உ.
தினைத்தாளின்பெயர்—அருவி, இருவி. உ.

துவரையின்பெயர்—ஆடகம். க. கடலையின்பெயர்—மஞ்சூரம். க.
அவரையின்பெயர்-சிக்கடி, சிம்பை. உ. உழுந்தின்பெயர்-மாடம். க.
பயற்றின்பெயர்-முற்கம். க. கொள்ளின்பெயர்-காணம், குலத்தம். உ.
துவரைகடலைமுதலியவற்றின்பெயர்—முதிரை, கூலம். உ.
காராமணியின்பெயர்—இதை. க.

நண்ணியசொன்னல்சோளநாட்டியவிறுங்குமாமே
எண்ணொடுதிலமுநூவுமெட்கவ்வையிளங்காயின்பேர்
பண்ணியகுமிகைதானேபயனுறுமிளையெள்ளாகும்
மண்ணியவரகினாமமருவுகோத்திரவமாமே. (௪௨)

குசையொடுகுமுதங்கூர்ச்சங்குசந்தர்ப்பையென்றுகூறும்
பசையுறுபதமேதூர்வைபச்சறுகிளம்புல்சட்பம்
நிசியரிசனமேபீதநிகரில்காஞ்சனியேமஞ்சள்
நசையுறுமிஞ்சியல்லநறுமருப்பென்றுமாமே. (௪௩)

கருணையினாமங்கந்தஞ்சூரணமென்றுங்காட்டும்
தருவகலியம்விருக்கந்தாவரம்விடபிதாருத்
துருமமேகுசமென்றெட்டுஞ்சொல்லியமரப்பொதுப்பேர்
பரவுபூருகமேசாகிபாதபமென்றும்பன்னும். (௪௪)

மூலமேசருனங்கந்தமூலகங்கிழங்கினாமம்
காலொடங்குரமுளைப்பேர்கருதுதூர்சிவையேவேராம்
கோலியம்விடபங்கொம்பர்கோடரம்பொங்கர்சாகை
பாலமர்கவடுதாருப்பணைசினையுலவைகொம்பாம். (௪௫)

கலையொடாசினியேசேகுகாழ்ப்புக்காழ்வயிரமாகும்
தலமடைதகடுபன்னஞ்சதனம்பத்திரம்பலாசம்
இலைதமாலமுமாமற்றுமிதிற்றழையுலவையென்ப
புலனுறுகுழவிபிள்ளைபோதகம்போத்துக்கன்றும். (௪௬)

மெல்லியலிளங்கொம்பின்பேர்மேவியுகவரேகப்பாம்
வல்லரிகிசலயம்பூமஞ்சரிமுறியலங்கல்
பல்லவங்குழைதளிர்ப்பேர்பகர்குருத்தேமுருந்து
சொல்லுங்காற்குழைத்தலோடேயிலிர்த்தலுந்தளிர்த்தலின்பேர்.()

முகைநனைகலிகைபோகின்முகுளமேமொக்குண்மொட்டு
மகிழ்வுறுகோரகங்கண்மற்றைச்சாலகமரும்பாம்
தகைபெறுகுசுமம்போதுதாரலர்சுமனசந்தான்
மிகுமணமலரேதாமம்வீயிணர்துணர்பூவின்பேர். (௪௮)

தொத்துமஞ்சரியினோடுதுணரிணர்குலையந்தும்பூங்
கொத்தின்பேர்மகரஞ்செய்யகொங்குகேசரம்பூந்தாதாம்
வைத்திடுந்துணருமாகுமகரந்தம்பூந்தேனென்ப
வைபத்தெழுந்தாதிற்றூளேபராகமாம்பிரசமும்பேர். (௪௯)

சோளத்தின்பெயர்—சொன்னல், இறுங்கு ௨.
எள்ளின்பெயர்—எண், திலம், நூ. ௩.
எள்ளிளங்காயின்பெயர்—கவ்வை. ௧.
இளையெள்ளின்பெயர்-குமிகை. ௧. வரகின்பெயர்-கோத்திரவம்.௧.

தருப்பையின்பேயர்—குசை, குமுதம், கூர்ச்சம், குசம். ௪.
அறுகின்பெயர்—பதம், தூர்வை. ௨. இளம்புல்லின்பெயர்-சட்பம்.
மஞ்சளின்பெயர்—நிசி, அரிசனம், பீதம், காஞ்சனி. ௪.
இஞ்சியின்பெயர்—அல்லம், நறுமருப்பு. ௨.

கருணைக்கிழங்கின்பெயர்—கந்தம், சூரணம். ௨.
மரப்பொதுவின்பெயர்—தரு, அகலியம், விருக்கம், தாவரம், விடபி, தாரு, துருமம், குசம், பூருகம், சாகி, பாதபம். ௧௧.

கிழங்கின்பெயர்—மூலம், சகுனம், கந்தம், மூலகம். ௪.
முளையின்பெயர்-கால், அங்குரம்.௨.வேரின்பெயர்-தூர், சிவை. ௨.
மரக்கொம்பின்பெயர்—கோல், இபம், விடபம், கொம்பர், கோடரம், பொங்கர், சாகை, கவடு, தாரு, பணை, சினை, உலவை. ௧௨.

மரவயிரத்தின்பெயர்—கலை, ஆசினி, சேகு, காழ்ப்பு, காழ். ௫.
இலையின்பெயர்—தலம், அடை, தகடு, பன்னம், சதனம், பத்திரம், பலாசம், தமாலம். ௮. தழையின்பெயர்—உலவை. ௧.
மரக்கன்றின்பெயர்—குழவி, பிள்ளை, போதகம், போத்து. ௪.

இளங்கொம்பின்பெயர்—மெல்லியல். ௧. கப்பின்பெயர் கவர். ௧.
தளிரின்பெயர்—வல்லரி, கிசலயம், மஞ்சரி, முறி, அலங்கல், பல்லவம், குழை. ௭. குருத்தின்பெயர்—முருந்து. ௧.
தளிர்த்தலின்பெயர்—குழைத்தல், இலிர்த்தல். ௨.

அரும்பின்பெயர்—முகை, நனை, கலிகை, போகில், முகுளம், மொக்குள், மொட்டு, கோரகம், சாலகம். ௯.
பூவின்பெயர்—குசுமம், போது, தார், அலர், சுமனசம், மலர், தாமம், வீ, இணர், துணர். ௧௦.

பூங்கொத்தின்பெயர்—தொத்து, மஞ்சரி, துணர், இணர், குலை. ௫.
பூந்தாதின்பெயர்—மகரம், கொங்கு, கேசரம், துணர். ௪.
பூத்தேனின்பெயர்—மகரந்தம். ௧.
தாதிற்றூளின்பெயர்—பராகம், பிரசம். ௨.

அலர்தலேயவிழ்தல்விள்ளன்மலர்தலாநெகிழ்தலும்பேர்
இலகியவிரிமலர்ப்பேரிகமலர்வெதிர்தொடர்ப்பூப்
பலமறுசாம்பல்செம்மல்பழம்பூவாங்தேம்பலும்பேர்
புலனுறுமேடுதோடுதளமடல்பூவிதழ்ப்பேர். (ரு௦)

அல்லியேயகவிதழ்ப்பேரரைந்திடும்புறவிதழ்ப்பேர்
புல்லியேவடுவும்பிஞ்சும்போற்றுந்தீவிளியுங்காயாம்
பல்லியற்கவிஞர்சொற்றபழங்கனிபலமுமாகும்
மெல்லியபரலுங்காழும்பீசமும்விதைவித்தும்பேர். (ருக)

குலேகுச்சந்தாறுசாறுகுடும்பொடுபடுவுங்கொத்தாம்
மலரவகேசிதானேவருபலமிலாமரப்பேர்
பலினங்காய்த்திருந்ததாருப்பகருலர்மரமேவானம்
புலர்விலாக்கோளியோடுவனபதிபூவாக்காய்க்கும். (ருஉ)

இந்தனமுருடுகட்டையிடுகறல்சமிதைகாட்டம்
வெந்திடுஞெகிழியேமும்விறகென்பமுளரியும்பேர்
வந்தகோடரம்பொதும்பர்மரச்செறிவாகும்பொந்து
முந்துபேர்பொள்ளலாகுமுட்கடுகண்டகம்மே. (ருங)

துடவைநந்தனவனம்பூந்தோட்டமேயரியுய்யானம்
கடிபொழிலுத்தியானங்காமரச்செறிவாராமம்
நெடியதண்டலேயினேடுநீளுபவனமேசோலே
வடிவுடையூர்சூழ்சோலேவனமெனவைக்கலாமே. (ருச)

அடவிகான்புறவம்பொச்சையாரணியங்காந்தாரம்
கடம்வனமுளரிதில்லங்கனங்கண்டகமேதாவம்
விடர்சுரம்பழுவங்கானல்விபினமேகட்சிகானம்
கடறுகானனமேயத்தங்களரிகாடிருபானற்பேர். (ருரு)

கிறைதருதூறுகுன்மநீள்பஞ்சிவிடபமும்பேர்
அறலிறல்பதுக்கைமுப்பேரறியலிஞ்சிறியதூறு
குறியகாடிறும்பென்முருகுங்கூறியபெருங்கான்வல்லே
மறையரணிளேயிரண்டும்வைத்தகாவற்காட்டின்பேர். (ருகா)

மலர்தலின்பெயர்—அலர்தல், அவிழ்தல், விள்ளல், நெகிழ்தல். ௪.
விரிமலரின்பெயர்—இகமலர், வெதிர், தொடர்ப்பூ. ௩.
பழம்பூவின்பெயர்—சாம்பல், செம்மல், தேம்பல். ௩.
பூவிதழின்பெயர்—ஏடு, தோடு, தளம், மடல். ௪.

அகவிதழின்பெயர்—அல்லி. ௧. புறவிதழின்பெயர்—புல்லி. ௧.
காயின்பெயர்—வடு, பிஞ்சு, நீவிளி. ௩.
பழத்தின்பெயர்—கனி, பலம். ௨.
விதையின்பெயர்—பரல், காழ், பீசம், வித்து. ௪.

கொத்தின்பெயர்—குலை, குச்சம், தாறு, சாறு, குடும்பு, படு. ௬.
பலமிலாமரத்தின்பெயர்—அவகேசி. ௧.
காய்த்திருந்தமரத்தின்பெயர்—பலினம். ௧.
உலர்ந்தமரத்தின்பெயர்—வானம். ௧.
பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—கோளி, வனபதி. * ௨.

விறகின்பெயர்—இந்தனம், முருடு, கட்டை, கறல், சமிதை, காட்டம், ஞெகிழி, முளரி. ௮.
மரச்செறிவின்பெயர்—கோடரம், பொதும்பர். ௨.
மரப்பொந்தின்பெயர்—பொள்ளல். ௧.
முள்ளின்பெயர்—கடு, கண்டகம். ௨.

சோலையின்பெயர்—தடவை, நந்தனவனம், பூந்தோட்டம், அரி, உய்யானம், பொழில், உத்தியானம், கா, மரச்செறிவு, ஆராமம், தண்டலை, உபவனம். ௧௨.
ஊர்சூழ்சோலையின்பெயர்—வனம். ௧.

காட்டின்பெயர்—அடவி, கான், புறவம், பொச்சை, ஆரணியம், காந்தாரம், கடம், வனம், முளரி, தில்லம், ககனம், கண்டகம், தாவம், விடர், சுரம், பழுவம், கானல், விபினம், கட்சி, கானம், கடறு, கானனம், அத்தம், களரி. ௨௪.

பெருந்தூற்றின்பெயர்—குன்மம், பஞ்சி, விடபம். ௩.
சிறுதூற்றின்பெயர்—அறல், இறல், பதுக்கை. ௩.
குறுங்காட்டின்பெயர்—இறும்பு. ௧.
பெருங்காட்டின்பெயர்—வல்லை. ௧.
காவற்காட்டின்பெயர்—அரண், இளை. ௨.

* பூத்துக்காய்க்குமரத்தின்பெயர்—வானபத்தியம். ௧.

முதையலேயிலையுதிர்ந்தமுதிர்காட்டினுமமாகும்
பொதிகரிகாடுபொச்சைபொருந்துமேயிளைவேலிப்பேர்
அதிகமற்றகங்காழ்த்திட்டதாண்மரம்புறக்காழ்பெண்ணும்
விதியுளிவ்விரண்டுமில்லாவெளிறலியாகுமென்ப. (௫௭)

புண்டரீகத்தினோடம்போருகங்குசேசயம்பூ
முண்டகமரவிந்தம்மேமுளரிபங்கயம்வாரீசம்
இண்டையம்புயஞ்சரோசமெழிற்சதபத்திரிசூழ்ந்து
வண்டுளர்நளினங்கஞ்சம்வனசந்தாமரையினாமம். (௫௮)

சலசமேகமலமற்றுஞ்சார்ந்தகோகனதத்தோடு
தலமுனுந்திருமாலுந்திசரோருகம்பதுமமும்பேர்
மலரின்பேரிதும்புவாகும்மற்றிராசீவமும்பேர்
புலர்வில்பொன்னிறத்தகொட்டைபொகுட்டேகன்னிகையுமாகும்.

விரித்திடுஞ்சுருளினாமம்விசியொடுவளையமாகும்
மருக்கிளர்தாமரைக்காய்வராடகமென்பநூலோர்
அரத்தவுற்பலமேவாசமடர்ந்தசெங்குவளைகோலத்
திருக்கிளர்கல்லாரங்கள்செங்கழுநீரின்பேரே. (௬0)

கோலமார்பானல்காவிகுவலயமணத்தைமொண்டு
காலத்தேனுலவுகின்றகருங்குவளைக்குநாமம்
நீலமிந்திவரந்தானிகழ்கருநெய்தலென்ப
கோலவுற்பலமுமாகுங்குமுதம்வெண்ணெய்தற்பேரே. (௬௧)

செங்குமுதஞ்செவ்வல்லிசேதாம்பலரக்காம்பற்பேர்
வெங்கள்ளுநாறுமல்லிகைரவம்வெள்ளாம்பற்பேர்
தங்கியதிரள்கோரைப்பேர்சாய்பஞ்சாய்க்கோரையென்ப
அங்குளசெருந்திதானேயடர்ந்தவாட்கோரையாமே. (௬௨)

ஒள்ளியகண்டன்முள்ளியுரைத்தமுண்டகமேயன்றி
முள்ளுடைமூலம்யாவும்முண்டகமென்றேசாற்றும்
தள்ளியநாரம்பாசிசைவலஞ்சடைச்சியும்பேர்
வள்ளியகல்லாரந்தான்மற்றைநீர்க்குளிரியாமே. (௬௩)

வல்லியும்புல்லும்பூடுமரமுதன்மருந்தென்றாகும்
சல்லியகரணிகூர்வேறைத்தபுண்மாற்றுந்துண்டம்
புல்லியசெய்வதானேசந்தானகரணிபோலும்
மெல்லியவிரணந்தீர்க்குஞ்சமனியகரணிவேறே. (௬௪)

முதிர்காட்டின்பெயர்—முதையல். க.
கரிகாட்டின்பெயர்-பொதி,பொச்சை.உ.வேலியின்பெயர்-இவே. க.
* ஆண்மரமென்பது—அகக்காழ்.பெண்மரமென்பது—புறக்காழ்.
அலிமரமென்பது—வெளிறு.

தாமரையின்பெயர்—புண்டரீகம், அம்போருகம், குசேசயம், முண்டகம், அரவிந்தம், முளரி, பங்கயம், வாரிசம், இண்டை, அம்புயம், சரோசம், சதபத்திரி, நளினம், கஞ்சம், வனசம். கரு.

சலசம், கமலம், கோகனதம், திருமாலுந்தி, சரோருகம், பதுமம். சு. (ஆ உக.)
தாமரைமலரின்பெயர்—இறும்பு, இராசீவம். உ.
தாமரைக்கொட்டையின்பெயர்—பொகுட்டு, கன்னிகை. உ.

தாமரைச்சுருளின்பெயர்—விசி, வளையம். உ.
தாமரைக்காயின்பெயர்—வராடகம். க.
செங்கழுநீரின்பெயர்—அரத்தவுற்பலம்,செங்குவளை,கல்லாரம். ந.

கருங்குவளையின்பெயர்—பானல், காவி, குவலயம். ந.
கருநெய்தலின்பெயர்—நீலம், இந்தீவரம், உற்பலம். ந.
வெண்ணெய்தலின்பெயர்—குமுதம். க.

அரக்காம்பலின்பெயர்—செங்குமுதம்,செவ்வல்லி,சேதாம்பல். ந.
வெள்ளாம்பலின்பெயர்—அல்லி, கைரவம். உ.
திரள்கோரையின்பெயர்—சாய், பஞ்சாய்க்கோரை. உ.
வாட்கோரையின்பெயர்—செருந்தி. க.

முள்ளியின்பெயர்—கண்டல், முண்டகம். உ.
முள்ளுடைமூலமெல்லாவற்றிற்கும்பெயர்—முண்டகம். க.
பாசியின்பெயர்—நாரம், சைவலம், சடைச்சி. ந.
நீர்க்குளிரியின்பெயர்—கல்லாரம். க.

மருந்தென்பன—வல்லி, புல், பூடு, மரமுதலிய.
வேல் தைத்த புண் மாற்று மருந்தின்பெயர்—சல்லியகரணி.
துணிபட்ட உறுப்பைப்பொருத்துமருந்தின்பெயர்-சந்தானகரணி.
விரணந்தீர்க்குமருந்தின்பெயர்—சமணியகரணி.

---

* ஆண்மரத்துக்கு வன்மரமென்றும் பெயர்: அவை கருங்காலி முதலியன. பெண்மரத்துக்கு வன்புல்லென்றும்பெயர்: அவை பனை, கமுகு, தெங்கு, மூங்கில். அலிமரம் முருக்கும் நாரும் பாலுமுள்ள மரமுதலாயினவுமாம்.

மறைவிலாமிருதசஞ்சீவனியுடனமுதிரண்டும்
குறைவறமூர்ச்சைதீர்த்தேகுற்றுயிர்தருமருந்தாம்
உறையொடுகுளியம்யோகமுறுமருந்தின்பொதுப்பேர்
அறையுங்காலந்தப்பேரேயதகமுமாகுமென்ப. (௬௫)

அலங்கலேபிணையலாரஞ்சிகழிகையணிசுருக்கை
இலம்பகந்தெரியல்சுக்கையேற்றகத்திகையேதாமம்
துலங்கியபடலைகண்ணிதொஙடதொங்கலொலியல்கோதை
மலர்ந்ததாரிவைமூவாறுமாலைமஞ்சரியுமப்பேர். (௬௬)

சூட்டுடனிலம்பகங்கள்சூழ்றுதலணியென்றுரும்
தீட்டுவாசிகையின்பேரேசிகழிகைபடலையென்ப
ஈட்டியகல்விகேள்வியிரீங்குடிகொடைபடைக்குள்
வாட்டமில்லவரைவென்றுமௌலிசூட்டுவதுவாகை. (௬௭)

பரப்புநீருலகுதன்னிற்பாவலர்கிளைஞருற்ற
நிரப்படுங்குணபத்திரன்றுணித்தலும்போற்றிசெய்து
விருப்புறுவிரதசீலன்வீரைமண்டலவன்செய்தான்
மரப்பெயர்க்கறுபத்தெட்டுமன்னியகவிதைதானே. (௬௮)

மரப்பெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆ விருத்தம் - ௩௫௩.



ஐந்தாவது

# இடப்பெயர்த்தொகுதி.



காப்பு.

கடலெழுமிரவிகோடிகால்சீத்துப்பொடித்ததென்ன
மடலவிழ்கமலவூர்திவந்தவாமனையேபோற்றி
அடைவுளதிணைதேமூர்வானகம்புறமாதியாய
இடனுடைத்தாகவைத்தவிடப்பெயர்த்தொகுதிசொல்வாம். (௧)

கேடிலாவபவருக்கங்கேவலத்தோடுசித்தி
வீடுகைவல்லியம்மேமீளாதகதியேநூலோர்
பாடுநிர்வாணத்தோடுபரகதிசிவமேமுத்தி
நீடுமீரைந்துமோக்கமமுதமுநிகழ்த்தலாமே. (௨)

மூர்ச்சைதீர்த்துக்குற்றுயிர் தருமருந்தின்பெயர்—மிருதசஞ்சீவனி, அமுது. உ.

மருந்தின்பொதுப்பெயர்—உறை, குளியம், யோகம், அகதம். ச.

மாலையின்பெயர்—அலங்கல், பிணையல், ஆரம், சிகழிகை, அணி, சுருக்கை, இலம்பகம், தெரியல், சுக்கை, கத்திகை, தாமம், படலை, கண்ணி, தொடை, தொங்கல், ஒலியல், கோதை, தார், மஞ்சரி. ககூ.

நுதலணியின்பெயர்—சூட்டு, இலம்பகம். உ.

வாசிகையின்பெயர்—சிகழிகை, படலை. உ.

வாகையாவது—கல்வி, கேள்வி, குடி, கொடை, படைகட்குள் வாட்டமில்லவரைவென்று மௌலி சூட்டுவது.



# பெயர்ப்பிரிவு.

இ - ள். கடல் எழும் இரவி கோடி கால் சீத்துப் பொடித்தது என்ன - சமுத்திரத்தினின்றும் எழுகின்ற கோடிசூரியர் இருளை நீக்கி உதித்தாற்போல,—மடல் அவிழ் கமலவூர்தி வந்த வாமனையே போற்றி - இதழ் விரியப் பெற்ற தாமரைமலராகிய வாகனத்தின்மேற் சென்ற அருகக்கடவுளையே துதித்து,—அடைவு உள திணை - முறைமையுள்ள ஐவகைநிலங்களும்,—தேம் - தேசங்களும்,—ஊர் - ஊர்களும்,—வான்-வானமும்,—அகம் - உள்ளிடமும்,—புறம் - வெளியிடமும்,—ஆதி ஆய இடன் உடைத்து ஆக வைத்த - முதலாகிய இடங்களின் பெயர்களை உடையதாக வைக்கப்பட்ட,—இடப்பெயர்த்தொகுதி சொல்வாம் - இடப்பெயர்த்தொகுதியை (யாம்) கூறுவாம். எ - று.

அருகக்கடவுள் தாமரைமலரை வாகனமாகக் கொண்டு அதனை யூர்ந்து சென்றமை திருநூற்றந்தாதியில் "நாயகத் தேவர்த நம்முதற்றேவரை நாண்மலர்வான்—மீயகத் தேவர மேற்கொள்ளுந் தேவரை மெய்யடியார்—வாயகத் தேவரும் வண்புகழ்த் தேவரை மாற்றி நெஞ்சே—நீயகத் தேவரை யித்தனை நாளு நினைத்தனையே." என்னும் அசு-ம் பாட்டாலறிக.

மோக்கத்தின்பெயர்—அபவருக்கம், கேவலம், சித்தி, வீடு, கைவல்லியம், மீளாதகதி, நிர்வாணம், பரகதி சிவம், முத்தி, அமுதம். கக.

உயர்நிலையுவணைபுத்தேளுலகுபொன்னுலகுதானம்
வியனுலகந்துறக்கமேலுலகம்விமானம்
நயனுறுசுவர்க்கங்கற்பநாகம்விண்ணுலகோடும்பர்
செயமுறுதேவலோகஞ்சிறந்திடுமீரேழ்பேரே. (௩.)

பரவியநாகலோகம்பவனமாஞ்சேடிசேணி
விரவுவிஞ்சையரூர்மற்றும்வீழதோகதிபாதாளம்
நிரயமேயளறேதீயேநீள்சுவப்பிரமேயூழல்
நரகிருள்பவர்க்கம்பத்துநரகமாம்பூதியும்பேர். (௪)

அரிதமாதிரம்விசும்போடம்பரமுலகுகாட்டை
கருதியதிசைகோவாசைககுபமுந்திகையுந்திக்காம்
பெருகுபூருவங்குணக்கேபிராசியைந்திரிகிழக்காம்
தெரியும்யாமியமவாசிதக்கிணஞ்சிவேதைதெற்கே. (௫)

குடக்குவாருணமேமேக்குக்குறித்தபச்சிமமேமேற்காம்
நடத்தியபிரத்தியக்குமற்றதன்பேரேநாட்டும்
வடக்குதக்குதீசியென்பமற்றையுத்தரமுமாகும்
விடப்படாத்திணையேமாவேவேலிபூநிலநாற்பேரே. (௬)

அவனிகாசினிசகத்தோடகலிடமகிலம்பாரி
குவலயம்விபுலைமற்றைக்கோத்திரைகோவேருவ்வே
புவனிமண்டலந்தலம்பூப்பொழில்வசுந்தரையுடன்பார்
பவனந்தாரணியினோடுபடிபுவிதரணிவையம். (௭)

தாலமேயசலைநேமிவசுமதிதரைதரித்திரி
ஞாலந்தாத்திரியளக்கர்நாடுபூதலங்கிடக்கை
பாலமேபூதிகங்கள்பார்த்திவம்பொறையனந்தை
வேலைசூழ்மகியாறேழுமேதினியுலகும்பூமி. (௮)

பாடிமண்டலமேசும்மைபைதிரமுலகுதேயம்
நீடியவகலுளேணிநீவரங்கோட்டங்கண்டம்
பீடுறுசனபதங்கள்பெரும்பொழிலிவையன்மூன்றும்
நாடுதண்ணடையுமாகுமழுவமுநாட்டுமப்பேர். (௯)

விலங்கலேபொறைவேதண்டம்விண்டுமாதிரமேவெற்புச்
சிலம்புகோத்திரமடுக்கல்சிலோச்சயஞ்சிமயம்பொங்கர்
நலங்கொள்குத்திரம்பறம்புநகங்குறும்பொறையேநாகம்
இலங்கியவரையேபொச்சையிறும்புகல்லகமேயோங்கல். (௧௦)

தேவலோகத்தின்பெயர்—உயர்நிலை, உவணை, புத்தேளுலகு, பொன்னுலகு, தானம், வியனுலகம், துறக்கம், மேலுலகம், விமானம், சுவர்க்கம், கற்பம், நாகம், விண்ணுலகு, உம்பர். கசு.

நாகலோகத்தின்பெயர்—பவனம். க.

விஞ்சையருரின்பெயர்—சேடி, சேணி. உ.

நரகத்தின்பெயர்—அதோகதி, பாதாளம், நிரயம், அளறு, தீ, சுவப்பிரம், ஊழல், நரகு, இருள், பவர்க்கம், பூதி. கக.

திக்கின்பெயர்—அரிதம், மாதிரம், விசும்பு, அம்பரம், உலகு, காட்டை, திசை, கோ, ஆசை, ககுபம், திகை. கக.

கிழக்கின்பெயர்—பூருவம், குணக்கு, பிராசி, ஐந்திரி. சு.

தெற்கின்பெயர்—யாமியம், அவாசி, தக்கிணம், சிவேதை. சு.

மேற்கின்பெயர்—குடக்கு, வாருணம், மேக்கு, பச்சிமம், பிரத்தியக்கு. ரு.

வடக்கின்பெயர்—உதக்கு, உதீசி, உத்தரம். ந.

நிலத்தின்பெயர்—திணை, மா, வேலி, பூ. சு.

பூமியின்பெயர்—அவனி, காசினி, சகம், அகலிடம், அகிலம், பாரி, குவலயம், விபுலை, கோத்திரை, கோ, கு, புவனி, மண்டலம், தலம், பூ, பொழில், வசுந்தரை, பார், பவனம், தாரணி, புடி, புவி, தரணி, வையம். உசு.

தாலம், அசலை, நேமி, வசுமதி, தரை, தரித்திரி, ஞாலம், தாத்திரி, அளக்கர், நாடு, பூதலம், கிடக்கை, பாலம், பூதிகம், பார்த்திவம், பொறை, அனந்தை, மகி, மேதினி, உலகு. உ0. (ஆ சுசு.)

நாட்டின்பெயர்—பாடி, மண்டலம், சும்மை, பைதிரம், உலகு, தேயம், அகலுள், ஏணி, நீவரம், கோட்டம், கண்டம், சனபதம், பொழில், தண்ணடை, அழுவம். கரு.

மலையின்பெயர்—விலங்கல், பொறை, வேதண்டம், விண்டு, மாதிரம், வெற்பு, சிலம்பு, கோத்திரம், அடுக்கல், சிலோச்சயம், சிமயம், பொருப்பு, குத்திரம், பறம்பு, நகம், குறும்பொறை, நாகம், வரை, பொச்சை, இறும்பு, கல்லகம், ஓங்கல், உஉ.

பொருப்பொடுகுவடுகல்லுப்பொகுட்டோதிகிரிகுன்று
பருப்பதஞ்சைலஞ்சாரல்பாதவம்பதலைதாணுப்
பெருத்தபூதரமேசையம்பிறங்கலத்திரியேபீலி
உருத்திகழ்கிரிமலைப்பேரொன்றுடனெண்ணைந்தென்ப. (௧௧)

புடைபடுமிறும்புகுன்றுபொற்றையேசிறுமலைப்பேர்
படுகுறும்பொறையேபொச்சைபதலையுமதன்பேர்வாரந்
தடமொடுசாரல்சானுதகுமலைப்பக்கங்கோடு
கொடுமுடிசிகரங்கூடங்குவடிவைமலையினுச்சி. (௧௨)

நிலைபெறும்பொன்மலைப்பேர்நீள்சுராலயமேமேரு
விலையில்வெண்மலைவேதண்டம்விசயார்த்தம்வெள்ளிவெற்பாம்
மலயந்தென்மலையேதென்றல்வருமலைசிமயநான்கும்
புலமைசேர்கும்பயோனிபொதியமாமலையினாமம். (௧௩)

பொறைதுறுகல்லென்றுரும்புகலுங்கற்பாழிகாண்டை
முறைமையாம்விவரத்தோடுமுடுக்கர்கந்தரமுழைப்பேர்
அறைமுரஞ்சாம்பிலங்கிழறையென்பகுகைநிகுஞ்சம்
சிறுகியதிடர்பதுக்கைதிட்டையுமிட்டநாமம். (௧௪)

சிலையொடுகன்னேசையஞ்சிராவணமுபலங்கல்லாம்
உலமென்பதிரண்டகற்பேருறும்பரல்பருக்கையென்ப
துலைபெறுதிடறுதிட்டைசுவன்மெட்டுக்குவாலேகுப்பை
குலவியதிடரேமேடுகுவையென்றுமிவையேகூறும். (௧௫)

பரவைதெண்டிரையேசிந்துபௌவமேபாராவாரம்
நரலையார்கலியேயுந்திநதிபதியம்புராசி
குரவையேசக்கரங்கார்கோள்வேலாவலயமுந்நீர்
அரிமகராலயந்நீராழியம்பரமேவேலை. (௧௬)

வாரிதியளக்கர்நீண்டவாரியேயுததியோதம்
வீரையன்னவமேயத்திவெள்ளஞ்சாகரமேயாழி
சாருறுசலதியுப்புச்சலநிதிசமுத்திரஞ்சூழ்
வாரணமிவையாறுறுமறிகடலுவரியும்பேர். (௧௭)

பாரியபாராவாரம்பகர்வேலைகடற்கரைப்பேர்
ஆருஞ்சீகரங்கல்லோலமறறரங்கந்திரைப்பேர்
வாரமேபாரங்கோடுவரையணைதடமேகூலம்
தீரமேநீர்க்கரைப்பேர்செறிவரம்பிற்கும்பேரே. (௧௮)

பொருப்பு, குவடு, கல், பொகுட்டு, ஓதி, கிரி, குன்று, பருப்பதம், சைலம், சாரல், பாதவம், பதலை, தாணு, பூதரம், சையம், பிறங்கல், அத்திரி, பீலி, கிரி. கக. (ஆ சக.)

சிறுமலையின்பெயர்—இறும்பு, குன்று, பொற்றை, குறும்பொறை, பொச்சை, பதலை. சு.
மலைப்பக்கத்தின்பெயர்—வாரம், தடம், சாரல், சானு. ச.
மலையினுச்சியின்பெயர்-கோடு,கொடுமுடி,சிகரம்,கூடம்,குவடு. ரு.

பொன்மலையின்பெயர்—சுராலயம், மேரு. உ.
வெள்ளிமலையின்பெயர்-வெண்மலை, வேதண்டம், விசயார்த்தம். ங.
பொதியமலையின்பெயர்—மலயம், தென்மலை, தென்றல்வருமலை, சிமயம். ச.

துறுகல்லின்பெயர்—பொறை. க. *கற்பாழியின்பெயர்-காண்டை.
மலைமுழையின்பெயர்—விவரம், முடுக்கர், கந்தரம். ங.
†அறையின்பெயர்—முரஞ்சு. க. கீழறையின்பெயர்—பிலம். க.
குகையின்பெயர்—நிகுஞ்சம். க.
சிறுதிடரின்பெயர்—பதுக்கை, திட்டை. உ.

கல்லின்பெயர்—சிலை, கன், சையம், சிராவணம், உபலம். ரு.
திரண்டகல்லின்பெயர்-உலம்.க.பருக்கைக்கல்லின்பெயர்-பரல். க.
மேட்டின்பெயர்—திடறு, திட்டை, சுவல், மெட்டு, குவால், குப்பை, திடர், குவை. அ.

கடலின்பெயர்—பரவை, தெண்டிரை, சிந்து, பௌவம், பாராவாரம், நரலை, ஆர்கலி, உந்தி, நதிபதி, அம்புராசி, குரவை, சக்கரம், கார்கோள், வேலாவலயம், முந்நீர், அரி, மகராலயம், நீராழி, அம்பரம், வேலை. உ0.

வாரிதி, அளக்கர், வாரி, உததி, ஓதம், வீரை, அன்னவம், அத்தி, வெள்ளம், சாகரம், ஆழி, சலதி, உப்பு, சலநிதி, சமுத்திரம், வாரணம், உவரி. கஎ. (ஆ ஙஎ.)

கடற்கரையின்பெயர்—பாராவாரம், வேலை. உ.
திரையின்பெயர்—சீகரம், கல்லோலம், அறல், தரங்கம். ச.
நீர்க்கரையின்பெயர்—வாரம், பாரம், கோடு, வரை, அணை, தடம், கூலம், தீரம். அ. இவை, வரம்பிற்கும்பெயர்.

* கற்பாழி—கற்புழை. † அறை—பாறை.

அருவியேகழிமுகம்பேரருவிப்பேருவதையாகும்
அருவியேமலையின்சாரலாற்றபிதானமென்ப
உரைசெயிலுவர்நீர்தானேயுறையென்பகுரம்புதான்செய்
கரையின்பேர்குலையுஞ்சேதுங்காட்டுபமீட்டதற்கே. (கக)

உந்தியேதுறையேமற்றையொலியலேகுடிஞையோணம்
சிந்துவேநதியேவீசுந்திரைவருபுனலேயாறும்
கந்தமார்கலுழிமுல்லைக்கான்யாறுங்கழிமுகப்பேர்
முந்தியகயவாயென்பபுகாரதோமுகமுமாமே. (உ0)

கழியின்பேர்முரம்புகாயல்கானலுப்பளமென்றுகும்
கழிநிலமுப்பளப்பேர்காட்டுமுப்பளமேகாயல்
அழிவிலாவுவளகத்தோடளக்கராம்புளினமென்ப
ஒழிவிலாமணற்குன்றின்பேருவர்த்தரையிரிணமாமே. (உக)

பொன்னிகாவிரியிரண்டும்பொருந்துகாவேரியின்பேர்
பன்னியபொருநையின்பேர்பகர்ந்ததண்பொருந்தர்தானே
கன்னியேகுமரியென்பகௌதமையின்பேர்கோதை
மின்னியவிருத்தகங்கைவிமலைகோதாவரிப்பேர். (உஉ)

படுகரேதாங்கல்கேணிபல்வலம்படுவேபட்டம்
மடுவுவளகமேபண்ணைவாவியேசுனையேவட்டம்
தடமொடுகயம்பயம்பூந்தடாகமேகுளமேகுட்டம்
அடைவுளகிடங்குகுழியலந்தையேகுண்டம்பங்கம். (உங)

இலஞ்சிகோட்டகமேபொய்கையேல்வையேயோடையேரி
நிலந்தனிற்குளிர்ந்தநீரிணிலையாறைந்தொன்றுநீங்கத்
தலந்தனிற்றெளிந்தநீரைச்சற்சலமென்றிசைப்பர்
இலங்கையேதுருத்தியாற்றினிடைக்குறையரங்கும்பேர். (உச)

நுரைமொக்குள்பௌவத்தோடுநொவ்வியபுற்புதங்கள்
குரைகொணீர்க்குமிழியைந்தாங்கொப்புளும்பேர்தானே
நுரையின்பேர்பேனமாகுநொய்யநீர்ச்சுழியேயுந்தி
பிரளயம்வாரிநீத்தம்பெருக்கோதமோகம்வெள்ளம். (உரு)

மண்டியநிறைபுனற்பேர்வழாறொடுபிராறுமாகும்
மிண்டியவகாதநீந்தும்வெம்புனலென்பநூலோர்
கண்டிடுங்கலங்கனீரேகலுழியாவிலமுமாகும்
குண்டமுந்தொடுகயங்கள்கூறுகம்பீரமாழம். (உசு)

அருவியின்பெயர்—கழிமுகம். க. பேரருவியின்பெயர்-உவதை.க.
மலைச்சாரலாற்றின்பெயர்—அருவி. க.
உவர்நீரின்பெயர்—உறை. க.
செய்கரையின்பெயர்—குரம்பு, குலை, சேது. ௩.

யாற்றின்பெயர்—உந்தி, துறை, ஒலியல், குடினை, ஓணம், சிந்து, நதி, வருபுனல். அ.
முல்லைக்கான்யாற்றின்பெயர்—கலுழி. க.
கழிமுகத்தின்பெயர்—கயவாய், புகார், அதோமுகம். ௩.

கழியின்பெயர்—முரம்பு, காயல், கானல், உப்பளம். ச.
கழிநிலம்—இதற்கு உப்பளப்பெயர்கள் யாவும் வரும்.
உப்பளத்தின்பெயர்—காயல், உவளகம், அளக்கர். ௩. மணற்குன்றின்பெயர்-புளினம். க. உவர்த்தரையின்பெயர்-இரிணம். க.

காவேரியின்பெயர்—பொன்னி, காவிரி, உ.
* பொருநையின்பெயர்—பொருந்தம். க.
கன்னியின்பெயர்—குமரி. க. கௌதமையின்பெயர்—கோதை. க.
கோதாவரியின்பெயர்—விருத்தகங்கை, விமலை. உ.

நீர்நிலையின்பெயர்—படுகர், தாங்கல், கேணி, பல்வலம், படு, பட்டம், மடு, உவளகம், பண்ணை, வாவி, சுனை, வட்டம், தடம், கயம், பயம், தடாகம், குளம், குட்டம், கிடங்கு, குழி, அலந்தை, குண்டம், பங்கம். உ௩.

இலஞ்சி, கோட்டகம், பொய்கை, ஏல்வை, ஓடை, ஏரி. சு. (ஆ உக.)
தெளிந்தநீரின்பெயர்—சற்லம். க.
யாற்றிடைக்குறையின்பெயர்—இலங்கை, துருத்தி, அரங்கம். ௩.

நீர்க்குமிழியின்பெயர்—நுரை, மொக்குள், பௌவம், புற்புதம், கொப்புள். ரு.
நுரையின்பெயர்—பேனம். க. நீர்ச்சுழியின்பெயர்—உந்தி. க.
வெள்ளத்தின்பெயர்-பிரளயம், வாரி, நீத்தம், பெருக்கு, ஓதம், ஓகம்.

நிறைபுனலின்பெயர்—வழாறு, பிராறு. உ.
நீந்துபுனலின்பெயர்—அகாதம். க.
கலங்கனீரின்பெயர்—கலுழி, ஆவிலம். உ.
ஆழத்தின்பெயர்—குண்டு, அழுந்து, கயம், கம்பீரம். ச.

* பொருநை—தாமிரபர்ணிநதி.

கோலமேபெருகுகின்றகொழுந்துநீரோட்டமென்ப
கோலியகிணறுகூபங்கூவலேயசும்புங்கூறும்
மேலிடாவஃகியூறும்வெம்புனலுறவியூற்றாம்
ஓலமிட்டூரினுள்ளாருண்பதூருணியென்றோதும். (உஎ)

அள்ளல்சேதகமேதோணியளறுடனளக்கர்தொய்யல்
கொள்ளமேசெதும்புபங்கங்குழையொடுகுழம்புகாலாழ்
தெள்ளியவசறுசெய்யலீரேழுஞ்சேருஞ்சேற்றிற்
புள்ளியேகுமிழ்பொகுட்டாநொதியருவருத்தசேறு. (உஅ)

பரவுசாட்டுவலமென்பபசும்புல்லுத்தரையின்பேரே
விரவியகரம்புபாழாம்வாலுகம்வெண்மணற்பேர்
மருவியவதரினோடேயிருநுண்மணலாமாற்றிற்
கரைதனிற்கொழித்தநுண்மைக்கருமணலறலென்றோதும். (உகூ)

கோடுசூழ்மலையின்சாரல்குறிஞ்சியாம்வனச்சார்முல்லை
நாடுசார்மருதமாகுநற்கடற்சார்வுநெய்தல்
நீடியகொடுங்கோன்மன்னர்நெடுங்குடைக்கீழ்வாழ்கின்ற
பாடிலாக்குடிகள்போலப்படுநிலம்பாலையாமே. (௩௦)

பழனமேசெறுவரம்புள்பணைபானல்கைதைபண்ணை
கழனியேயாலவாலங்காட்டியதடிபுலஞ்செய்
விளைவுறுவயலேமாவேவிளைநிலமீரேழ்பேராம்
குழைவுறுபாத்தியோடுகுண்டிலுஞ்சிறுசெய்கூறும். (௩௧)

செந்நெலேவிளைவதானசிறப்புடைநிலஞ்சாலேயம்
இன்னதென்றுமலுண்டாமுருவரையென்பதானே
மன்னியவகணிபானல்வயல்பணைமருதநாற்பேர்
அந்நிலவரம்புதானேகுரம்பதனருகுகங்கு. (௩௨)

புறவொடுபுறம்பணைப்பேர்புணர்முல்லைகுறிஞ்சிக்கும்பேர்
பறையும்வன்பால்குறிஞ்சிபாலையாமருதந்தானே
நிறையுமென்பாலாம்வெற்பினீரினில்வெவ்வனத்திற்
கறைபடுமிருதிதானேகருநிலமாகுமென்ப. (௩௩)

நீரோட்டத்தின்பெயர்—கோலம். க.
கிணற்றின்பெயர்—கூபம், கூவல், அசும்பு. ங.
ஊறுபுனலின்பெயர்—அஃகி, உறவி, ஊற்று. ங.
ஊரிலுள்ளாருண்ணுநீரின்பெயர்—ஊருணி. க.

சேற்றின்பெயர்—அள்ளல், சேதகம், தோணி, அளறு, அளக்கர், தொய்யல், கொள்ளம், செதும்பு, பங்கம், குழை, குழம்பு, காலாழ், அசறு, செய்யல். கச.
சேற்றிற்புள்ளியின்பெயர்—குமிழ், பொருட்டு. உ.
அருவருத்தசேற்றின்பெயர்—நொதி. க.

பசும்புல்லுத்தரையின்பெயர்—சாட்டுவலம் க.
பாழ்நிலத்தின்பெயர்-கரம்பு.க.வெண்மணலின்பெயர்-வாலுகம்.க.
நுண்மணலின்பெயர்—அதர், அயிர். உ.
கருமணலின்பெயர்—அறல். க.

மலைசார்ந்தநிலம்—குறிஞ்சி. வனஞ்சார்ந்தநிலம்—முல்லை.
நாடுசார்ந்தநிலம்—மருதம். கடல்சார்ந்தநிலம்—நெய்தல்.
கொடுங்கோன்மன்னர் குடைக்கீழ் வாழ்கின்ற குடிகள்போலப் படுநிலம்—பாலை.

விளைநிலத்தின்பெயர்—பழனம், செறு, வரம்புள், பணை, பானல், கைதை, பண்ணை, கழனி, ஆலவாலம், தடி, புலம், செய், வயல், மா. கச.
சிறுசெய்யின்பெயர்—பாத்தி, குண்டில். உ.

செந்நெல்விளைநிலத்தின்பெயர்—சாலேயம். க.
அனைத்துமுண்டாகுநிலத்தின்பெயர்—உருவரை. க.
மருதநிலத்தின்பெயர்—அகணி, பானல், வயல், பணை. ச.
வரம்பின்பெயர்—குரம்பு. க. வரம்பருகின்பெயர்—கங்கு. க.

முல்லைக்குங்குறிஞ்சிக்கும்பெயர்—புறவு, புறம்பணை. உ.
வன்பாலென்பது—குறிஞ்சியும் பாலையும்.
* மென்பாலென்பது—மருதம்.
கருநிலமென்பது—வெற்பினும் நீரினும்வனத்தினுங்கறைபடுமிகுதி.

* சமப்பாலென்பது முல்லையும் நெய்தலும். அது "முல்லையுநெய்தலு மொழிசமப் பாலே" என்னும் திவாகரச் சூத்திரத்தாலறிக.

பாக்கமேயிருக்கைபாழிபட்டினம்பள்ளிமுட்டம்
பூக்கஞ்சம்வாகநொச்சிபூரியம்பாடிபூண்டி
மாக்கிளர்கோட்டம்வாழ்க்கைமடப்பமேகுடிகுடிக்கா
டாக்கமாங்குறிச்சிகுப்பமருப்பமோநத்தஞ்சும்மை. (௩௪)

அகரமேபுரமேசேரியகலுள்வைப்புறையுள்வேலி
நகரம்பக்கணங்கிராமநவில்கருவடங்குறும்பு
நிகரில்வேசனமேதாமநிவேசனம்பதியேபேடு
பகர்புரியெண்ணேந்தூர்நீர்பண்ணைசூழூர்கிராமம். (௩௫)

குடிநூறுபடவிருந்தாற்குறைவுளகிராமமாகும்
நெடியதுகுடியைஞ்ஞூறுநிறைந்ததுபெருங்கிராமம்
வடிவுடையிராசதானிமணிமதிற்கோபுரங்கள்
புடைபடுமகழாற்சூழ்ந்தபுரம்புரிநகரமும்பேர். (௩௬)

மலைசெறிவதுவேகேடமலையுடனாறுசூழூர்
அலைவறுகருவடங்களைஞ்ஞூறுகிராமத்திற்கே
தலைமைபெற்றதுமடப்பந்தாழ்கடற்றீரந்தன்னிற்
பலபலதீவிற்பண்டம்பகர்வபட்டனமென்றுமே. (௩௭)

மட்டறுநெல்லும்புல்லுமத்தகந்தன்னிலேற்றுத்
தட்டறுமலையினூரேசம்வாகமென்றுசாற்றும்
தொட்டதோணுமுகந்தான்சூழ்கழியிருக்கையென்ப
பட்டுநொச்சியுமேசிற்றூர்பள்ளியுமதன்பேர்பன்னும். (௩௮)

குறிச்சிசிற்றூரேசீறூர்குறிஞ்சிநன்னிலத்தூர்ப்பேராம்
பறித்திடுமுல்லையூரேபாடிபட்டினமேநெய்தல்
குறித்தெழுகுறும்பரூரேகுறும்புபாலைக்கேகூற்றும்
பறித்தபாசறையேதெவ்வர்முனைப்பதிபாடிவீடு. (௩௯)

புரிகுடிநகரம்பூக்கம்புரங்குடிநிகாயம்பள்ளி
சரணமாவாசம்பாக்கந்தாவளநிகமந்தாமம்
பரவியநிலயங்கோட்டம்பதிவாழ்க்கைசேர்வுபாழி
மருதநன்னிலத்தூரீரைந்திரட்டியாம்வசதியும்பேர். (௪௦)

காழகங்கடாரமாம்வாராணசிகாசியென்ப
ஈழமேசிங்களம்வீறெய்தியகருவூர்வஞ்சி
கோழியேயுறையூர்மாறன்கூடலேமதுரையாகும்
தாழ்விலாக்காஞ்சிகச்சிசாற்றிடிலவந்தியுஞ்சை. (௪௧)

ஊரின்பெயர்—பாக்கம், இருக்கை, பாழி, பட்டினம், பள்ளி மூட்டம், பூக்கம், சம்வாகம், நொச்சி, பூரியம், பாடி, பூண்டி, கோட்டம், வாழ்க்கை, மடப்பம், குடி, குடிக்காடு, குறிச்சி, குப்பம், அருப்பம், நத்தம், சும்மை. உஉ.

அகரம், புரம், சேரி, அகலுள், வைப்பு, உறையுள், வேலி, நகரம், பக்கணம், [பத்தணம்] கிராமம், கருவடம், குறும்பு, வேசனம், தாமம், நிவேசனம், பதி, பேடு, புரி. கஅ. (ஆ சo.)
நீரும்வயலுஞ்சூழ்ந்தவூர்—கிராமம்.

சிறுகிராமமென்பது—நூறுகுடிநிறைந்தவூர்.
பெருங்கிராமமென்பது—ஐஞ்ஞூறுகுடிநிறைந்தவூர்.
இராசதானியின்பெயர்—புரம், புரி, நகரம். ங.

மலைசெறிந்தவூரின்பெயர்—கேடம். க.
மலையும் யாறுஞ்சூழ்ந்தவூரின்பெயர்—கருவடம். க.
ஐஞ்ஞூறுகிராமத்திற்குத் தலைமைபெற்ற கிராமத்தின்பெயர்—மடப்பம். க. பலபலதீவிற்பண்டம்விற்குமூரின்பெயர்—பட்டனம். க.

நெல்லும்புல்லும் நிறைந்தமலையினூரின்பெயர்—சம்வாகம். க.
கழியிருக்கையின்பெயர்—தோணுமுகம். க.
சிற்றூரின்பெயர்—பட்டு, நொச்சி, பள்ளி. ங.
குறிஞ்சிநிலத்தூரின்பெயர்—குறிச்சி, சிற்றூர், சீறூர். ங.

முல்லைநிலத்தூரின்பெயர்—பாடி. க.
நெய்தனிலத்தூரின்பெயர்—பட்டினம். க.
பாலைநிலத்தூரின்பெயர்—குறும்பு. க.
* பாசறையின்பெயர்—தெவ்வர்முனைப்பதி, பாடிவீடு. உ.

மருதநிலத்தூரின்பெயர்—புரி, குடம், நகரம், பூக்கம், புரம், குடி, நிகாயம், பள்ளி, சரணம், ஆவாசம், பாக்கம், தாவளம், நிகமம், தாமம், நிலயம், கோட்டம், பதி, வாழ்க்கை, சேர்வு, பாழி, வசதி. உக.

கடாரமென்னுமூரின்பெயர்—காழகம். க. காசியின்பெயர்—வாரணசி. க. சிங்களத்தின்பெயர்—ஈழம். க. கருவூரின்பெயர்—வஞ்சி. க. உறையூரின்பெயர்—கோழி. க. மதுரையின்பெயர்—கூடல். க. காஞ்சியின்பெயர்—கச்சி. க. அவந்திநகரின்பெயர்—உஞ்சை. க.

* பாசறை—பகைமேற்சென்றோருறைவிடம்.

மிதிலையேவிதேகையாங்காவிரிப்பூம்பட்டினம்புகாராம்
விதமுறுவினிதைகோலமிக்ககோசலைசாகேதம்
நிதிவளரயோத்திநாமநிமலமாம்புலியூர்தில்லை
கதிதருசிதம்பரப்பேர்கமலையேதிருவாரூராம். (சஉ)

பெருகியகடகங்காப்புப்பிராகாரநொச்சியாரல்
புரிசைவேணகையேவாரிபுகழுவளகமேயிஞ்சி
அரணமேயெயிலேயோதையருஞ்சிறைவேதிசாலம்
மருவியவகப்பாவேலியறுமூன்றுமதிலினமம். (சங)

பரிகமேகிடங்குகேணிபாம்புரியுடுவேயோடை
விரவியவகழாறேபேர்மேவுமெந்திரமேகோசம்
மருவியநாஞ்சிறேணிஞாயிலம்மதிலுறுப்பாம்
பரிகமேயகப்பாவோடுபதணமுள்ளுயர்ந்தமேடை. (சச)

விரிந்தகோபுரமேகோட்டிமிகும்புரவாயிலின்பேர்
பொருந்துமக்கதவில்விட்டுப்புகும்வழிபுதவுதானே
திருந்துமவ்வழிச்சார்திண்ணையளிந்தமாஞ்சிறந்தவாயிற்
பரந்திடும்படிச்சுருட்குப்பகரத்தினகமேநாமம். (சரு)

கோதிலாவணமங்காடிகூலம்பீடிகையுமப்பேர்
தீதில்வையாளிவீதிதிகழ்செண்டுவெளியேயென்ப
சாதியாம்புரவிவட்டந்திருமுற்றந்தானுமப்பேர்
வீதியின்பேரேஞெள்ளல்பூரியமரசர்வீதி. (சசு)

நெடுந்தெருமன்றமார்க்கநிகமமிம்முப்பேர்செப்பும்
ஒடுங்கியகுறுந்தெருக்களோதியமறுகுதானே
முடங்கியகோணந்தன்னைமுடுக்கெனலடுக்குமிப்பால்
அடங்கியமுச்சந்திப்பேரந்தியென்றறையலாமே. (சஎ)

தக்கசந்தாஞ்சதுக்கந்தருஞ்சிருங்காடகந்தான்
ஒக்குநாற்சந்தியாகுமோதியசதுக்கமும்பேர்
திக்குறும்வாடைசேடிசிரேணியாமாயர்வீதி
மிக்கவாபீனமாமாவேசனஞ்சிற்பர்வீதி. (சஅ)

பற்றியவேடர்வீதிபக்கணமாகுமென்ப
மற்றையம்பலமேமன்றம்பொதிபொதுச்சபையுமாகும்
தெற்றியம்பலந்தானென்றேசித்திரகூடநாமம்
வெற்றியத்தாணியோடுவேத்தவையரசிருக்கை. (சகூ)

மிதிலையின்பெயர்—விதேகை. க. காவிரிப்பூம்பட்டினத்தின்பெயர்—புகார். க.
அயோத்தியின்பெயர்—வினிதை, கோசலை, சாகேதம். ௩.
சிதம்பரத்தின்பெயர்-புலியூர்,தில்லை.உ. திருவாரூரின்பெயர்-கமலை

மதிலின்பெயர்—கடகம்,காப்பு, பிராகாரம், நொச்சி,ஆரல்,புரிசை, வேணகை, வாரி, உவளகம், இஞ்சி, அரணம், எயில், ஓதை, சிறை, வேதி, சாலம், அகப்பா, வேலி. க௮.

அகழின்பெயர்—பரிகம், கிடங்கு, கேணி,பாம்புரி,உடு, ஓடை. ௬.
மதிலுறுப்பின்பெயர்—எந்திரம், கோசம், ஞாஞ்சில், தோணி, ஞாயில். ௫.
மதிலுள்ளுயர்ந்தமேடையின்பெயர்—பரிகம்,அகப்பா,பதணம். ௩.

நகரவாயிலின்பெயர்—கோபுரம், கோட்டி. உ.
நகரவாயிற்கதவில்விட்டுப்புகும்வழியின்பெயர்—புதவு. க.
நகரவாயிற்றிண்ணையின்பெயர்—அளிந்தம். க.
நகரவாயிற்படிச்சுருளின்பெயர்—அத்தினகம். க.

* அங்காடியின்பெயர்—ஆவணம், கூலம், பீடிகை. ௩.
குதிரைவையாளிவீதியின்பெயர்—செண்டுவெளி, புரவிவட்டம், திருமுற்றம். ௩.
வீதியின்பெயர்—ஞெள்ளல்.க. அரசர்வீதியின்பெயர்—பூரியம். க.

நெடுந்தெருவின்பெயர்—மன்றம், மார்க்கம், நிகமம். ௩.
குறுந்தெருவின்பெயர்—மறுகு. க.
கோணத்தெருவின்பெயர்—முடுக்கு. க.
முச்சந்தியின்பெயர்—அந்தி. க.

சந்தின்பெயர்—சதுக்கம். க.
நாற்சந்தியின்பெயர்—சிருங்காடகம், சதுக்கம். உ.
சிரேணியின்பெயர்—வாடை, சேடி. உ.
ஆயர்வீதியின்பெயர்-ஆபீனம்.க.சிற்பர்வீதியின்பெயர்-ஆவேசனம்.

வேடர்வீதியின்பெயர்—பக்கணம். க.
அம்பலத்தின்பெயர்—மன்றம், பொதி, பொது, சபை. ௪.
சித்திரகூடத்தின்பெயர்—தெற்றியம்பலம். க.
அரசிருக்கையின்பெயர்—அத்தாணி, வேத்தவை. உ.

* அங்காடி - கடைவீதி.

சாலைமாளிகைகுலங்கள்சாற்றியபவனங்கோயில்
மாலைவேலரசரிற்பேர்மந்திரநிலயங்கோட்டம்
ஆலயஞ்சினகரஞ்சேதிமந்தளிதேவர்கோயில்
சாலைமற்றறத்தின்சாலையறப்புறமோதம்பள்ளி. (ரு0)

வனைதருசமித்தமோமமண்டபமன்னன்றேவி
புனையில்லங்கந்தவாரம்போற்றுமந்தப்புரப்பேர்
மனையில்லம்புக்கின்மாடமந்திரம்வசதிவீடாம்
புனைகலனிருக்கைதானேபோற்றியபண்டசாலை. (ருக)

விரவிறைவீட்டிறப்பேவ்ளவியுமாம்விடங்கம்
தருமுகட்டின்பேர்வேயுள்வேய்தலாந்தகுமண்ணீடு
மருவியவேயாமாடமங்கணமுன்றின்முற்றம்
கருதுகல்விக்களப்பேர்கழகங்கல்லூரியாமே. (ருஉ)

ஆயுதஞ்சூதுகூத்துப்பயில்களமரங்கமென்ப
வாயிலேகடைதுவாரம்வாரியாஞ்சோபானம்மே
தூயதாழ்வாரமென்பவங்கணந்தூம்புவாயாம்
ஆயபித்திகைசுவர்க்காமரமியநிலாமுற்றப்பேர். (ருங)

ஆலயமோளிவாரியானையின்கூடமாமே
சாலைமந்துரையிரண்டும்வாசியின்பந்திதானே
சாலகஞ்சாளரம்வாதாயனங்குறுங்கண்சாலம்
காலதர்பலகணிப்பேர்கரந்தகற்படைசுருங்கை. (ருச)

குட்டிமம்படுத்தபூமிகுறடுவேதிகைமண்ணீடு
திட்டையேதிண்ணைசிற்றில்கூரையாங்குடில்குரம்பை
தட்டுருவடிச்சேரிப்பேர்தானடிக்குடிலென்றுமே
அட்டிலேபாகசாலையடுக்களைமடைப்பள்ளிப்பேர். (ருரு)

காழூறுகுமுதஞ்சுல்லிகாமரமடுப்புமுப்பேர்
தாழுமுத்தானமும்பேர்தடவொடுவேள்விக்குண்டம்
வேள்வியேயோமகுண்டநித்தமும்வேதியும்பேர்
பாழிதாபதங்கரண்டைபள்ளியேமுனிவர்வாசம். (ருசு)

அரசரில்லின்பெயர்—சாலை, மாளிகை, குலம்,பவனம்,கோயில். ரு.
தேவர்கோயிலின்பெயர்—மந்திரம், நிலயம், கோட்டம், ஆலயம், சினகரம், சேதிமம், தளி. எ.
அறச்சாலையின்பெயர்-சாலை. க. ஓதும்பள்ளியின்பெயர்-அறப்புறம்.

ஓமமண்டபத்தின்பெயர்—சமித்தம். க.
மன்னன்றேவியில்லத்தின்பெயர்—கந்தவாரம், அந்தப்புரம். உ.
வீட்டின்பெயர்—மனை, இல்லம், புக்கில்,மாடம்,மந்திரம்,வசதி. சு.
பண்டசாலையின்பெயர்—கலனிருக்கை. க.

வீட்டிறப்பின்பெயர்—இறை, வளவி. உ.
முகட்டின்பெயர்—விடங்கம். க. * வேயுளின்பெயர்-வேய்தல். க.
வேயாமாடத்தின்பெயர்—மண்ணீடு. க.
முற்றத்தின்பெயர்—அங்கணம், முன்றில். உ.
கல்விபயில்களத்தின்பெயர்—கழகம், கல்லூரி. உ.

ஆயுதஞ்சூதுகூத்துப்பயில்களத்தின்பெயர்—அரங்கம். க.
வாயிலின்பெயர்—கடை,துவாரம்,வாரி. ௩. தாழ்வாரத்தின்பெயர்-சோபானம். க. † தூம்புவாயின்பெயர்—அங்கணம். க.
சுவரின்பெயர்—பித்திகை. க. நிலாமுற்றத்தின்பெயர்-அரமியம். க.

யானைக்கூடத்தின்பெயர்—ஆலயம், ஒளி, வாரி. ௩.
குதிரைப்பந்தியின்பெயர்—சாலை, மந்துரை, [மந்திரை.] உ.
பலகணியின்பெயர்—சாலகம், சாளரம், வாதாயனம், குறுங்கண், சாலம், காலதர். சு. ‡ கரந்தகற்படையின்பெயர்—சுருங்கை. க.

கற்படுத்தநிலத்தின்பெயர்—குட்டிமம். க.
திண்ணையின்பெயர்—குறடு, வேதிகை, மண்ணீடு, திட்டை. ச.
சிற்றிலின்பெயர்—கூரை. க. குடிலின்பெயர்—குரம்பை. க.
அடிச்சேரியின்பெயர்—அடிக்குடில். க.
மடைப்பள்ளியின்பெயர்—அட்டில், பாகசாலை, அடுக்களை. ௩.

அடுப்பின்பெயர்—குமுதம், சுல்லி, காமரம், உத்தானம். ச.
ஓமகுண்டத்தின்பெயர்—தடவு, வேள்விக்குண்டம், வேள்வி, நித்தம், வேதி. ரு.
முனிவர்வாசத்தின்பெயர்—பாழி, தாபதம், கரண்டை, பள்ளி. ச.

* வேயுள் வேயப்படுமாடம்: † தூம்புவாய் சலதாரை.
‡ கற்படை கோட்டையிற்கள்ளவழி.

மஞ்சனப்புகைசூழ்சுள்ளைமட்கலஞ்சுடுசூளைப்பேர்
பஞ்சரம்பண்ணுங்கூடாம்பகர்குலாயனமுமப்பேர்
குஞ்சுறைகட்சிகூண்டுகுடம்பையேகூட்டின்பேராம்
விஞ்சுநென்முதலாம்பண்டம்வீழ்குதிர்புகலென்றோதும். (௫௭)

சட்டகம்பாயல்பள்ளிசயனமேயுறையுள்பாழி
கட்சியேயமளிசேக்கைகண்படைமளிதர்பாலாம்
பட்டமேபோத்துச்சேக்கைபண்ணையும்விலங்கின்பாலாம்
இட்டசேவகமேதண்டம்யானையின்றுயிலிடப்பேர். (௫௮)

சுடுகாடுபுறங்காட்டோடுதொடர்காளவனம்பிணக்கா
டிடுகாடுபிதிர்வனத்தோடீமமேவனமயானம்
படுகாடுசுடுநிலங்கள்பன்னொன்றுஞ்சுடலையின்பேர்
கடிதாஞ்செம்புலம்பிணம்வீழ்களம்பறந்தலையுமாமே. (௫௯)

வெற்றிகொள்களரியேயாகவபூமிவிளாகமேமொய்
செற்றிடும்போர்க்களம்வெஞ்செருக்களம்பொருகளப்பேர்
புற்றுவன்மீகமென்பபுகுமொதுக்கிடமேதுச்சில்
உற்றவேறிடமேகாந்தமொருவந்தமென்றும்பேரே. (௬௦)

ஓழிவுகீழ்பயம்புதாழ்வேயேற்றிடும்படுகர்ஞெள்ளல்
குழியுவளகங்கிழக்குக்கூறவல்பள்ளம்பத்தாம்
பழையதாங்கொல்லைப்பேரேபகர்முதைப்புனமாமென்ப
விழைவுறுபுதியகொல்லையிதைப்புனமுழவுதொய்யல். (௬௧)

வதிசுரம்வட்டைநீண்டவகுந்தொடுவயவைவாரி
அதர்நெறிசெலவுதாரியயனமேயிடைவைமார்க்கம்
பதவையேயத்தஞ்செப்பம்பட்டமேயியவைபாதை
உதவியசரியேதாரையொழுக்கமேநடவையாறு. (௬௨)

தெருவகிர்கிறிமூவொன்பான்செப்பியவழியின்பேரே
அருநெறிப்பேர்சுரத்தோடத்தமுங்கடமுமாகும்
கருதியகவலைதானேகவர்ந்திடுவழிப்பேரென்ப
பெருமதயானைசெல்லும்பிறவழிதண்டமாமே. (௬௩)

சிறுவழிவிடங்கராகுஞ்சிறந்தகற்படியினுமம்
மறுவில்சோபானமேயாரோகணந்தானுமற்றும்
நெறிபடுமளக்கரென்பநீள்வழிசாமந்தானே
உறுதியாம்புதுவரம்பினுறுவழிமரிசியென்ப. (௬௪)

மட்கலஞ்சுடுசூளையின்பெயர்—சுள்ளை. க.
பண்ணுங்கூட்டின்பெயர்—பஞ்சரம், குலாயனம். உ.
கூட்டின்பெயர்—கட்சி, கூண்டு, குடம்பை. ௩.
குதிரின்பெயர்—புகல். க.

மனிதர்துயிலிடத்தின்பெயர்—சட்டகம், பாயல், பள்ளி, சயனம், உறையுள், பாழி, கட்சி, அமளி, சேக்கை, கண்படை. க0.
விலங்குதுயிலிடத்தின்பெயர்-பட்டம், போத்து, சேக்கை, பண்ணை.
யானைதுயிலிடத்தின்பெயர்—சேவகம், தண்டம். உ.

சுடலையின்பெயர்—சுடுகாடு, புறங்காடு, காளவனம், பிணக்காடு, இடுகாடு, பிதிர்வனம், ஈமம், வனம், மயானம், படுகாடு, சுடுநிலம். கக
பிணம்வீழ்களத்தின்பெயர்—செம்புலம், பறந்தலை. உ.

பொருகளத்தின்பெயர்—களரி, ஆகவபூமி, விளாகம், மொய், போர்க்களம், செருக்களம். சு.
புற்றின்பெயர்—வன்மீகம். க. ஒதுக்கிடத்தின்பெயர்—துச்சில். க.
ஏகாந்தத்தின்பெயர்—வேறிடம், ஒருவந்தம். உ.

பள்ளத்தின்பெயர்—இழிவு, கீழ், பயம்பு, தாழ்வு, படுகர், ஞெள்ளல், குழி, உவளகம், கிழக்கு, அவல். க0.
பழங்கொல்லையின்பெயர்—முதைப்புனம். க.
புதுக்கொல்லையின்பெயர்—இதைப்புனம். க.
உழவின்பெயர்—தொய்யல். க.

வழியின்பெயர்—வதி, சுரம், வட்டை, வகுந்து, வயவை, வாரி, அதர், நெறி, செலவு, தாரி, அயனம், இடவை, மார்க்கம், பதவை, அத்தம், செப்பம், பட்டம், இயவை, பாதை, சரி, தாரை, ஒழுக்கம், நடவை, ஆறு. உச.

தெரு, வகிர், கிறி. ௩. (ஆ உஎ.)
அருநெறியின்பெயர்—சுரம், அத்தம், கடம். ௩.
கவர்வழியின்பெயர்—கவலை. க.
யானைசெல்லும்வழியின்பெயர்—தண்டம். க.

சிறுவழியின்பெயர்—விடங்கர். க.
கற்படியின்பெயர்—சோபானம், ஆரோகணம். உ.
நீள்வழியின்பெயர்—அளக்கர். க.
புதுவரம்பின்வழியின்பெயர்—மரிசி. க.

இடையுழிவழிநிலம்பாலில்லுழையுளிகண்பக்கம்
புடைதலைமுதல்வளாகம்புலம்வலஞ்சூழல்பாங்கர்.
கடைவயின்பட்டிவைப்புக்கால்களந்தேயம்பாடே
இடமென்பமுன்பின்சார்வாய்கீழ்மேலுமதுவேயென்ப. (சுரு)

பாங்கர்பாரிசமருங்குபால்புடைபுறமேபக்கம்
ஞாங்கருஞ்சிறையுமாடுநாட்டுபவதுவேமீட்டும்
நாங்கிளர்நள்ளுநாப்பணனந்தலைபிரமமையம்
ஆங்குறுமத்தியத்தோடாகுநாநடுவேழ்பேரே. (சுசு)

ஈண்டேயிவ்விடமென்பேராமிம்பரேயிவணெனுஞ்சொல் [ல்
யாண்டேயெவ்விடமென்பேராம்யாங்கென்ப வெவணெனுஞ்சொ
ஆண்டேயவ்விடமென்பேர்தானுகுங்கூப்பிடுகுரோசம்
காண்டும்யோசனைபுகைப்பேர்காவதங்காதமாமே. (சுஎ)

முன்னுடுமேலுமற்றுமொழியுமஞ்ஞாங்கர்தானே
முன்னரேதலைத்தாளாகுமுதலொடுபுரமுமப்பேர்
அன்னதிவ்விடப்பேர்க்கெட்டோடறுபதுவிருத்தஞ்செய்தான்
மன்னுசீர்க்குணபத்திரன்றுள்வணங்குமண்டலவன்றனே. (சுஅ)

இடப்பெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆ விருத்தம் - சஉக.

---

ஆ று வ து

# பல்பொருட்பெயர்த்தொகுதி.

---

## கா ப் பு.

உலகெலாமிறைஞ்சியேத்தவுலகெலாமுணர்ந்தமூர்த்தி
அலகிலாஞானவாரியாதிருகணங்களோடும்
இலகுமூவெயிலுள்யாளியெழிலணையிருந்தோன்பாதம்
பலமுறைவணங்கியேத்திப்பல்பொருட்பெயருஞ்சொல்வாம். (க)

மாசைபீதகமேபீதமாடையேமாடுவேங்கை
ஆசையேசுவணங்காரமருத்தங்காஞ்சனமேகாணம்
தேசிகங்கனங்கைத்துச்செந்தாதுபொலமேயத்தம்
பேசியசாமிவித்தம்பெருந்தனமுடலேபண்டம். (உ)

இடத்தின்பெயர்—இடை, உழி, வழி, நிலம், பால், இல், உழை, உளி, கண், பக்கம், புடை, தலை, முதல், வளாகம், புலம், வலம், சூழல், பாங்கர், கடை, வயின், பட்டி, வைப்பு, கால், களம், தேயம், பாடு, முன், பின், சார், வாய், கீழ், மேல். ௩௨.

பக்கத்தின்பெயர்—பாங்கர், பாரிசம், மருங்கு, பால், புடை, புறம், ஞாங்கர், சிறை, மாடு. ௯.
நடுவின்பெயர்—நள், நாப்பண், நளந்தலை, பிரமம், மையம், மத்தியம், நா. எ.

இவ்விடத்தின்பெயர்—ஈண்டு. க. இம்பரென்பது—இவண். க.
எவ்விடத்தின்பெயர்—யாண்டு. க. யாங்கென்பது—எவண். க.
அவ்விடத்தின்பெயர்—ஆண்டு. க.
கூப்பிடுதூரத்தின்பெயர்—குரோசம். க.
யோசனைதூரத்தின்பெயர்-புகை. க. காதத்தின்பெயர்-காவதம். க.

ஞாங்கரென்பது—முன், மேலுக்கும்பெயர்.
முன்னரின்பெயர்—தலைத்தாள், முதல், புரம். ௩.



# பெயர்ப்பிரிவு.



இ - ள். உலகு எலாம் இறைஞ்சி ஏத்த உலகு எலாம் உணர்ந்த மூர்த்தி - உலகத்தவர்கள் யாவரும் வணங்கித் துதிக்க உலகமுழுதையும் அறிந்த கடவுளும்,—அலகு இலா ஞான வாரி - அளவில்லாத ஞானக்கடலும்,—ஆறிருகணங்களோடும் இலகு மூவெயிலுள் எழில் யாளி அணை இருந்தோன் பாதம் - பன்னிரண்டு கணங்களோடும் விளங்குகின்ற மும்மதிலையுடைய சமவசரணத்தினுள்ளே அழகினையுடைய சிங்காசனத்தில் வீற்றிருந்தவரும் ஆகிய அருகக்கடவுளுடைய பாதத்தை,—பலமுறை வணங்கி ஏத்தி - பலதரம் வணங்கித் துதித்து,—பல்பொருட்பெயரும் சொல்வாம் - பல்பொருட் பெயர்த்தொகுதியும் (யாம்) கூறுவாம். எ - று.

பொன்னின்பெயர்—மாசை, பீதகம், பீதம், மாடை, மாடு, வேங்கை, ஆசை, சுவணம், காரம், அருத்தம், காஞ்சனம், காணம், தேசிகம், கனகம், கைத்து, செந்தாது, பொலம், அத்தம், சாமி, வித்தம், தனம், உடல், பண்டம். ௨௩.

இரணியநிதிவெறுக்கையீகைகல்யாணமேமம்
பொருளுரைசந்திரஞ்சாம்பூனதம்பூரியீழம்
திரவியஞ்சாதரூபஞ்செங்கொல்லுநிதானமாழை
அரிதபனியமாறேழுஞ்செம்பொனுடகமுமாமே. (௩)

எதிரில்பொன்வெள்ளிசெம்போடிரும்பீயம்பஞ்சலோகம்
பொதிகஞ்சந்தராவுங்கூட்டிப்புகன்றிடினேழுலோகம்
கதிர்நவமணியின்பேருங்கடவுண்மாமணியின்பேரும்
நிதிநிதானங்களென்பநீண்டபொற்காசுகாணம். (௪)

கருதியமணிப்பொதுப்பேர்காசொடுமனவுமாகும்
அரதனஞ்சலாகைதெய்வவகன்மணிப்பொதுப்பேர்தானே
மருவுசெம்மணியேமற்றைமாமணிமாணிக்கப்பேர்
பரவியபதுமராகங்கௌத்துபமென்றுபன்னும். (௫)

வரைவறுவாலவாயம்வைடூரியத்தினாமம்
நிரைபெறுமணியெனும்பேர்நீலமாமணியின்பேரே
மரகதமரியேபச்சைவச்சிரம்வைரமாரம்
தரளநித்திலமேமுத்துமௌத்திகந்தானுமப்பேர். (௬)

துப்புடன்றுவரரத்தந்துகிர்பிரவாளமைந்தும்
மெய்ப்படுபவளமென்பவித்துருமந்தானும்பேர்
கைப்படுதகணைமாழைகாட்டும்வங்காரமுப்பேர்
ஒப்பவேயுருக்கிக்கூட்டுமுலோகத்தின்கட்டியாமே. (௭)

சங்கநீணிதியத்தோடுதாமரைநிதியந்தானே
அங்கண்மாஞாலத்தேயவ்விருவுருவாகுமென்ப
பொங்கியகோசந்தண்டம்போற்றுபண்டாரமாகும்
தங்கிடுமுருக்கினாமமெஃகெனச்சாற்றலாமே. (௮)

கருதியசுல்லுத்தாரங்களதௌதம்வெண்பொன்னோடும்
இரசதம்வெள்ளியின்பேரேற்றகாரீயநாகம்
எருவையேயுதும்பரந்தாமிரமொடுவடுவேசெம்பாம்
பொருவறுசீருள்சிக்கமிவைகளின்பொதுப்பேராமே. (௯)

திருந்தியவீயம்வங்கஞ்சீருளேசீசமும்பேர்
புரிந்தபித்தளையேமாயாபுரியாரகூடமும்பேர்
கரூங்கஞ்சமுறைகளேவெண்கலமதுகந்தராவாம்
கருங்கொல்லேயயமேசொன்னகரும்பொன்னுமிரும்பினாமம். (௧௦)

இரணியம், நிதி, வெறுக்கை, ஈகை, கல்யாணம், ஏமம், பொருள், உரை, சந்திரம், சாம்பூனதம், பூரி, ஈழம், திரவியம், சாதரூபம், செங்கொல், நிதானம், மாழை, அரி, தபனியம், ஆடகம். உ௦. (ஆ சஙு.)

பஞ்சலோகமாவன—பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம்.
எழுலோகமாவன—பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், கஞ்சம், தரா.
நவமணியின்பெயர்-நிதி. க. கடவுண்மணியின்பெயர்-நிதானம். க.
பொற்காசின்பெயர்—காணம். க.

மணிப்பொதுப்பெயர்—காசு, மனவு. உ.
தெய்வமணிப்பொதுப்பெயர்—அரதனம், சலாகை. உ.
மாணிக்கத்தின்பெயர்—செம்மணி, மாமணி. உ.
பதுமராகத்தின்பெயர்—கௌத்துபம். க.

வைடூரியத்தின்பெயர்—வாலவாயம். க.
நீலமணியின்பெயர்-மணி. க. மரகதத்தின்பெயர்-அரி, பச்சை. உ.
வைரத்தின்பெயர்—வச்சிரம். க.
முத்தின்பெயர்—ஆரம், தரளம், நித்திலம், மௌத்திகம். ச.

பவளத்தின்பெயர்—துப்பு, துவர், அரத்தம், துகிர், பிரவாளம், வித்துருமம். சு.
உலோகக்கட்டியின்பெயர்—தகணை, மாழை, வங்காரம். ங.

சங்கநிதியென்பது—சங்கின்வடிவினது.
பதுமநிதியென்பது—தாமரைவடிவினது.
பண்டாரத்தின்பெயர்—கோசம், தண்டம். உ.
உருக்கின்பெயர்—எஃகு. க.

வெள்ளியின்பெயர்—சுல்லு, தாரம், களதௌதம், வெண்பொன், இரசதம். ரு. காரீயத்தின்பெயர்—நாகம். க.
செம்பின்பெயர்—எருவை, உதும்பரம், தாமிரம், வடு. ச.
இவைகளின்பொதுப்பெயர்—சீருள், சிக்கம். உ.

ஈயத்தின்பெயர்—வங்கம், சீருள், சீசம். ங.
பித்தளையின்பெயர்—மாயாபுரி, ஆரகூடம். உ.
வெண்கலத்தின்பெயர்-கஞ்சம், உறை. உ. தராவின்பெயர்-மதுகம். க
இரும்பின்பெயர்—கருங்கொல், அயம், கரும்பொன். ங.

தொந்தமாயிரும்புள்வாங்குஞ்சலாகைசும்பகமேயென்ப
சந்திரகிரணநீர்கால்சலாகையேசந்திரகாந்தம்
வந்தசூரியகாந்தந்தான்மற்றதனொளிதீக்காலும்
ருந்துகைரிகமேதாதுநற்செங்கல்காவிக்கல்லே. (௧௧)

கண்ணியபளிங்கிணுமங்காழ்படிகம்பருக்கை
மண்ணியகவுடிசோகிவராடியேபலகறைப்பேர்
பண்ணியம்வளமேகூலம்பண்டாரம்பண்ணிகாரம்
நண்ணியபலபண்டப்பேர்நடைப்பரிகாரமும்பேர். (௧௨)

விருப்பமாமரும்பண்டப்பேர்மேவியதாரமாகும்
கருப்பூரம்பளிதத்தோடுகனசாரஞ்சசிமுப்பேரே
பிரித்தமான்மதங்கத்தூரிபீதமேகலவையோடு
பொருத்தும்வட்டிகையுமற்றைப்புலியுநால்வகையிற்சாந்து. (௧௩)

கலவைச்சேறேகரலேகவண்ணமேகளபமேமெய்
குலவியவிரையேசாந்தாங்குங்குமப்பேர்செஞ்சாந்தாம்
இலகியதகரமேலங்காசறைமயிர்ச்சாந்தின்பேர்
கல்லவையேகளபமென்பகலம்பகங்கண்டபேரே. (௧௪)

உலப்பிலாத்தேய்வைசெச்சைசெறிகுழம்புற்றபேர்கைத்
தலத்தினிற்கொட்டலப்பல்சாத்துதல்சதுர்த்தலும்பேர்
புலர்த்தலேவரித்தலென்பபூசுதலின்பேர்தானே
அலைத்துமெய்ப்பூசும்பூச்சினபிதானமங்கராகம். (௧௫)

இலகியவெழுதுகோலாவிளையவர்முலையுந்தோளும்
நலமிகவெழுதுகோலநவின்றிடுந்தொய்யிலென்ப
திலகமேசுடிகைசுட்டிதிலதமுமதன்பேர்செப்பும்
திலகம்புண்டரங்களென்பசெறிநெற்றிக்குறிகளாமே. (௧௬)

இங்குலிகந்தான்சாதிலிங்கமாங்குலிகமும்பேர்
குங்குலியந்தானேகுங்குலுவாங்குக்குலுவுமப்பேர்
செங்கதிர்க்கிரணம்போலுஞ்சிந்தூரப்பேர்சேலேகம்
இங்குவேபெருங்காயப்பேரெழிலலத்தகஞ்செம்பஞ்சு. (௧௭)

பறையரக்கரத்தந்துப்பாம்பழுப்பென்பதரிதாரப்பேர்
அறுகுவெள்ளரிசிகூட்டியணிவ * தக்கதமென்றாகும்
குறுணியொவ்வொன்றதாகக்கொள்கலம்பல்லுணைக்கள்
பெறுமுறைபரப்பிவைப்பபிரப்பெனப்பேசலாமே. (௧௮)

---

* அக்கதத்தை அச்சுதமென்று வழங்குவர்.

* இரும்புள்வாங்குஞ்சலாகையின்பெயர்—சும்பகம். க.
சந்திரகிரணத்தினீர்கால்சலாகையின்பெயர்—சந்திரகாந்தம். க.
சூரியனொளியிற்றீக்கால்சலாகையின்பெயர்—சூரியகாந்தம். க.
காவிக்கல்லின்பெயர்—கைரிகம், தாது, செங்கல். ங.

பளிங்கின்பெயர்—காழ், படிகம், பருக்கை. ங.
பலகறையின்பெயர்—கவுடி, சோகி, வராடி. ங.
பலபண்டத்தின்பெயர்—பண்ணியம், வளம், கூலம், பண்டாரம், பண்ணிகாரம், நடைப்பரிகாரம். சு.

அரும்பண்டத்தின்பெயர்—தாரம். க.
கருப்பூரத்தின்பெயர்—பளிதம், கனசாரம், சசி. ங.
கத்தூரியின்பெயர்—மான்மதம். க.
நால்வகைச்சாந்தாவன—பீதம், கலவை, வட்டிகை, புலி.

சாந்தின்பெயர்-கலவைச்சேறு, கர்லேகவண்ணம்,களபம்,விரை.ச.
குங்குமத்தின்பெயர்—செஞ்சாந்து. க.
மயிர்ச்சாந்தின்பெயர்—தகரம், ஏலம், காசறை. ங.
கலவையின்பெயர்—களபம், கலம்பகம். உ.

செறிகுழம்பின்பெயர்—தேய்வை, செச்சை. உ.
அப்பலின்பெயர்—கொட்டல், சாத்துதல், சார்த்தல். ங.
பூசுதலின்பெயர்—புலர்த்தல், வரித்தல். உ.
மெய்ப்பூச்சின்பெயர்—அங்கராகம். க.

முலையினுந்தோளினுமெழுதுகோலத்தின்பெயர்—தொய்யில். க.
திலகத்தின்பெயர்—சுடிகை, சுட்டி, திலதம். ங.
நெற்றிக்குறியின்பெயர்—திலகம், புண்டரம். உ.

சாதிலிங்கத்தின்பெயர்—இங்குலிகம், குலிகம். உ.
குங்குலியத்தின்பெயர்—குங்குலு, குக்குலு. உ.
சிந்தூரத்தின்பெயர்—சேலேகம். க.
பெருங்காயத்தின்பெயர்-இங்கு.க.செம்பஞ்சின்பெயர்-அலத்தகம்.

அரக்கின்பெயர்-அரத்தம்,துப்பு.உ.அரிதாரத்தின்பெயர்-பழுப்பு.க
அக்கதமென்பது—அறுகுவெள்ளரிசிகூட்டியணிவது.
பிரப்பென்பன—குறுணியொவ்வொன்றதாகக்கொள்கலத்துட்பல் லுணக்கள் பரப்பிவைப்பனவாம்.

---

* இரும்புள்வாங்குஞ்சலாகை—ஊசிக்காந்தம்.

வெந்திடுஞ்சமித்தையோமவிறகெனவறையலாகும்
நிந்தைசெய்ஞெகிழிகொள்ளிநெருப்புறுவிறகின்பேரே
கந்துளேயிருந்தைகல்லங்கரியென்பகடைக்கொள்ளிக்கு
மூந்துபேரலாதமுற்கமுளரியோடிராதமாமே. (கக)

அடலைவெண்பலிசாம்பர்ப்பேராந்திருநீறேபற்பம்
பொடியொடுவிபூதிகாப்பாம்புண்ணியசாந்தஞ்சாணி
பொடிதுகள்சுண்ணந்தூளிபூழியேபுழுதியாகும்
சுடுசுண்ணச்சாந்துமண்ணுஞ்சுதையொடுகளபமும்பேர். (உ0)

நொய்யதோரிலவின்பஞ்சுதுவன்றபேர்பூளைதானே
பையெனும்பருத்திபன்னல்பரியுமாந்தூலம்பஞ்சாம்
ஐயநுண்ணிடையார்நூற்குமப்பஞ்சிற்றொடர்நுனிப்பேர்
துய்யெனுநாமமாகுந்தொடர்பிசின்பயினென்றேபேர். (உக)

அடிசில்போனகமேமூரலமலையேயயினிபொம்மல்
மடைமிசையுணப்புழுக்கல்வல்சிபாளிதமேயன்னம்
தொடுபதமிதவைபாத்துத்துற்றுண்டிசொன்றிபுன்க
மொடுசொருவசனமூண்கூழோதனம்புகாவேசோறும். (உஉ)

மெச்சமிழ்தவியிஞ்ஞோடுபலிசருவிண்ஞேருணும்
அச்சமில்பொதிசோறென்பதாற்றுணாத்தோட்கோப்பும்பேர்
மிச்சிலோடெச்சஞ்சேடமிகுபொருளென்பமும்பேர்
உச்சிட்டமொன்றேயெச்சில்பிரப்புப்பேருண்டியாமே. (உ௩)

நிறையநெய்பொதிபாற்சோறுநிகழ்த்துபாயசமென்றுரும்
நறையிடுங்கருனைதானேநாட்டியபொரியலின்பேர்
அறைதருவெந்தைபிட்டாமஃகுல்லியுக்காரிப்பேர்
வறையலின்பேரேயோச்சைமலாவகம்பிண்ணாக்கின்பேர். (உச)

நொடிதரிலருப்பம்பிட்டநுவணையேபிண்டிமாப்பேர்
இடியுமாமிலட்டுகத்தோடேற்றமோதகமேதோசை
அடைநொலையபூபங்கஞ்சமண்டகையப்பவர்க்கம்
இடையறநுகர்வோர்தங்கட்கிவைகள்சிற்றுண்டியாமே. (உரு)

கூடியதுவையெனுஞ்சொற்புளிங்கறிகூட்டமைத்து
நீடியேசமைப்பதாகுநீடாணங்கறிகளின்பேர்
காடியேயவாகுமோழைகஞ்சிபாகேகுழம்பாம்
பாடிலாவமிழ்துகிரம்பயசுதுத்தம்பயம்பால். (உசா)

ஓமவிறகின்பெயர்—சமிதை. க.
நெருப்புறுவிறகின்பெயர்—ஞெகிழி, கொள்ளி. உ.
கரியின்பெயர்—கந்துள், இருந்தை, நல்லம். ௩.
கடைக்கொள்ளியின்பெயர்—அலாதம், உற்கம்,முளரி,இராதம். ச.

சாம்பரின்பெயர்—அடலை, வெண்பலி. உ.
திருநீற்றின்பெயர்—பற்பம், பொடி, விபூதி, காப்பு. ச.
சாணியின்பெயர்—புண்ணியசாந்தம். க.
புழுதியின்பெயர்—பொடி, துகள், சுண்ணம், தூளி, பூழி. ரு.
சுண்ணச்சாந்தின்பெயர்—மண், சுதை, களபம். ௩.

இலவின்பஞ்சின்பெயர்—பூளை. க.
பருத்திப்பஞ்சின்பெயர்-பன்னல்,பரி.உ. பஞ்சின்பெயர்-தூலம்.க.
நூற்கும்பஞ்சிற்றொடர்நுனியின்பெயர்—துய். க.
பிசினின்பெயர்—பயின். க.

சோற்றின்பெயர்—அடிசில், போனகம், மூரல், அமலை, அயினி, பொம்மல், மடை, மிசை, உணா, புழுக்கல், வல்சி, பாளிதம், அன்னம், பதம், மிதவை, பாத்து, நூற்று, உண்டி, சொன்றி, புன்கம், சரு, அசனம், ஊண், கூழ், ஓதனம், புகா. உகூ.

விண்ணோருணின்பெயர்—அமிழ்து, அவி, பலி, சரு. ச.
* பொதிசோற்றின்பெயர்—ஆற்றுணா, தோட்கோப்பு. உ.
மிகுபொருளின்பெயர்—மிச்சில், எச்சம், சேடம். ௩.
எச்சிலின்பெயர்-உச்சிட்டம். க. பேருண்டியின்பெயர்-பிரப்பு. க.

பாற்சோற்றின்பெயர்—பாயசம்.க.பொரியலின்பெயர்—கருனை.க.
பிட்டின்பெயர்—வெந்தை. க. உக்காரியின்பெயர்—அஃகுல்லி. க.
வறையலின்பெயர்--ஒச்சை.க. பிண்ணாக்கின்பெயர்--மலாவகம். க.

மாவின்பெயர்—அருப்பம், பிட்டம், நுவணை, பிண்டி, இடி. ரு.
அப்பவர்க்கமாவன—இலட்டுகம், மோதகம், தோசை, அடை, நொலை, அபூபம், கஞ்சம், அண்டகை. இவைகள் சிற்றுண்டியாம்.

புளிங்கறியின்பெயர்—துவை.க. கறியின்பெயர்—நீடாணம். க.
கஞ்சியின்பெயர்—காடி, யவாகு, மோழை. ௩.
குழம்பின்பெயர்—பாகு. க.
பாலின்பெயர்—அமிழ்து, ஈரம், பயசு, துத்தம், பயம். ரு.

* பொதிசோறு—கட்டுச்சோறு.

ததிதயிர்பெருகுமாகுந்தக்கிரங்காலசேயம்
மதித்மோடளையருப்பமச்சிகைமுசரேமோர்ப்பேர்
விதமுறையங்கவீனநவநீதம்வெண்ணெயாநெய்
இதமுறுகிருதநேயமிழுதாச்சியந்துப்பாமே. (உஎ)

கண்டம்பாளிதங்களென்பகண்டசர்க்கரையினுமம்
கண்டதேயயிரும்புல்லகண்டமுமதற்கேகூற்றும்
விண்டெழுகட்டிகன்னல்விசயமேகுளமக்காரம்
பிண்டசர்க்கரையந்தேபேர்பிரசந்தேன்மதுவுமப்பேர். (உஅ)

அரியல்பாடலிதேன்மட்டேயரிட்டமேசுண்டைதொண்டி
முருகுசாயனமேகௌவைமுண்டகஞ்சாதிசாலி
பிரசமாதவமேமேதைபிழிசேறுதணியன்மாரி
சுரைமதுசுமாலிமாலிசுலோகியேசொல்விளம்பி. (உகூ)

நறவொடாசவமேதொப்பிநனையிக்குஞாளிகுந்தி
வெறிவெடிசாறுபானம்விகுணியேசோபம்வேரி
மறவிதேஞ்சுவிகைதேறன்மகரந்தமதிரையாம்பல்
அறிவழிபடுவாறெட்டுங்கள்ளினுக்கமைத்தபேரே. (௩0)

அரியதோரமிழ்துதானேயமரியேசுதைமருந்தாம்
கரளமேயாலங்காரிகடுவுடன்காளஞ்சிங்கி
விரவியவாலகாலம்விடமெட்டுநஞ்சின்பேரே
பருகுதருவையேபானம்பகர்நேயந்தைலமெண்ணெய். (௩க)

அலைவறுதுற்றியுண்பவாந்திற்றிதின்பவாகும்
இலைநுகர்விலங்குணவேகுளகெனவியம்பலாகும்
நலனுறுபறவையோடுநாட்டொருசார்விலங்கின்
உலகினூணுண்டியூட்டியுணவிரையுறையுமாமே. (௩உ)

துப்புடனேதுவென்னுஞ்சொற்றுணைக்காரணப்பேர்
ஒப்பவேசாதனத்தோடுபகரணமுமாமப்பேர்
செப்பியயுகளத்தோடுசேர்ந்திடுமுபயமென்ப
அப்படியிரண்டிலக்கத்தபிதானமாகுந்தானே. (௩௩)

பணிவுறுகானல்வெண்டேர்பாழ்த்தபேய்த்தேருமாகும்
துணியறைதுக்குத்தானேசல்லியாஞ்சொல்லுநெல்லின்
மணிபலகறையினோடுமகிழ்விதையலகென்றாகும்
அணியொழுங்கோளியந்திநிரைநிரல்வரிசையாமே. (௩ச)

தயிரின்பெயர்—ததி, பெருகு. உ.
மோரின்பெயர்—தக்கிரம், காலசேயம், மதிதம், அளை, அருப்பம், மச்சிகை, முசர். எ.
வெண்ணெயின்பெயர்—ஐயங்கவீனம், நவநீதம். உ.
நெய்யின்பெயர்—கிருதம், நேயம், இழுது, ஆச்சியம், துப்பு. ரு.

கண்டசர்க்கரையின்பெயர்—கண்டம், பாளிதம், அயிர், புல்ல கண்டம். ச.
சர்க்கரையின்பெயர்—கட்டி, கன்னல், விசயம், குளம், அக்காரம். ரு.
தேனின்பெயர்—பிரசம், மது. உ.

கள்ளின்பெயர்—அரியல், பாடலி, தேன், மட்டு, அரிட்டம், சுண்டை, தொண்டி, முருகு, சாயனம், கௌலை, முண்டகம், சாதி, சாலி, பிரசம், மாதவம், மேதை, பிழி, சேறு, தணியல், மாரி, சுரை, மது, சுமாலி, மாலி, சுலோகி, சொல்விளம்பி. உசு.

நறவு, ஆசவம், தொப்பி, நளை, இக்கு, ஞாளி, குந்தி, வெறி, வெடி, சாறு, பானம், விருணி, சோபம், வேரி, மறவி, தேம், சுவிகை, தேறல், மகரந்தம், மதிரை, ஆம்பல், படு. உஉ. (ஆசஅ.)

அமிழ்தின்பெயர்—அமரி, சுதை, மருந்து. ந.
நஞ்சின்பெயர்—கரளம், ஆலம், காரி, கடு, காளம், சிங்கி, ஆலகாலம், விடம். அ.
பானத்தின்பெயர்—பருகுதல், துவை. உ.
எண்ணெயின்பெயர்—நேயம், தைலம். உ.

உண்பவற்றின்பெயர்—துற்றி. க. தின்பவற்றின்பெயர்—திற்றி. க.
இலைநுகர்விலங்குணவின்பெயர்—குளகு. க.
பறவையொருசார்விலங்குகளினுணவின்பெயர்—உண்டி, ஊட்டி, உணவு, இரை, உறை. ரு.

துணைக்காரணத்தின்பெயர்—துப்பு, ஏது, சாதனம், உபகரணம். ச.
இரண்டென்னுமிலக்கத்தின்பெயர்—யுகளம், உபயம். உ.

கானலின்பெயர்—வெண்டேர், பேய்த்தேர். உ.
சல்லியின்பெயர்—துணி, அறை, துக்கு. ந.
நென்மணிபலகறைமகிழ்விதையென்பவற்றின்பெயர்—அலகு. க.
வரிசையின்பெயர்—அணி, ஒழுங்கு, ஒளி, பந்தி, நிரை, நிரல். சு.

மகரகேதனனென்றவாமற்கேதொழும்புசெய்வோன்
இகலிலாக்குணபத்திரன்றனிருசரணிதயம்வைத்தோன்
மிகுபுகழ்புனையாகின்றவீரைமண்டலவன்செய்தான்
பகர்தருமுப்பத்தைந்துபல்பொருட்பெயர்க்குச்செய்யுள். (ஙரு)

பல்பொருட்பெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆ விருத்தம் – சருசு.

—∞—

# ஏழாவது

# செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி.

## காப்பு.

முழுமதிமுக்குடைக்கீழ்மூர்த்திதாள்போற்றல்செய்தே
எழுவகையுலோகந்தன்னிலேற்றமண்மரங்கடம்மிற்
பழுதறுதோலினாலிற்பற்பலவிதங்களாக
வழுவுறுதிடுஞ்செயற்கைவடிவப்பேர்த்தொகுதிசொல்வாம். (க)

பரசொடுநவியந்தண்ணம்பாலமேகணிச்சியென்ப
விரவியமழுப்படைப்பேர்மேவுசக்கரப்பேர்நேமி
பரிதியேவலயமெஃகம்பகர்சுதரிசனமாழி
திருமிகுமொளிவட்டம்மேதிகிரியாம்வளையுமப்பேர். (உ)

தனுவொடுசிந்துவாரந்தடிசராசனங்கோதண்டம்
குனிசிலைதுரோணஞ்சாபங்கொடுமரத்தோடுவேணு
முனிதவர்சராரோபங்கார்முகமீரேழிவைவில்லின்பேர்
இனியதோர்சார்ங்கமால்வில்லீசன்விற்பினாகமாமே. (ங)

பூரியேதொடையேயாவம்பூட்டேசிஞ்சினிநரம்பு
நாரியேவடங்குணந்தாணியொன்பானேநாமம்
கூரியசரமேவாளிகொடுங்கணைபகழிவண்டு
பாரியகதிரங்கங்கபத்திரமத்திரங்கோல். (ச)

பாணமாசுகமேபூதைபத்திரிவிசிகம்புங்கம்
தோணிசாயகமேபல்லந்தொடைசிலீமுகமேவம்பாம்
பூணுறுமம்புக்கட்டிப்புதைபுழுகாகுங்துப்பி
கோணிலாக்குலையேபுங்கங்குதையுதண்மொட்டம்பாமே. (ரு)

# பெயர்ப்பிரிவு.

இ - ள். முழுமதி முக்குடைக்கீழ் மூர்த்தி தாள் போற்றல் செய்து-பூரணசந்திரன்போலும் மூன்றுகுடையின்கீழ் வீற்றிருந்த அருகக்கடவுளுடைய பாதத்தைத் துதிசெய்து,—எழுவகை உலோகந்தன்னில் - எழுவகைப்பட்ட உலோகத்தினாலும்,—ஏற்ற மண் மரங்கள் தம்மில் - இயைந்த மண்ணினாலும் மரங்களினாலும்,—பழுது அறு தோலின் - குற்றமற்ற தோலினாலும்,—நூலின் - நூலினாலும்,—பற்பல விதங்கள் ஆக வழு உறுது இடும் - பலபலவிதங்களாகக் குற்றம் பொருந்தாமற் செயப்படுகின்ற,—செயற்கை வடிவப் பேர்த் தொகுதி சொல்வாம் - செயற்கைவடிவப்பெயர்த்தொகுதியை (யாம்) கூறுவாம். எ - று. இடுமென்னும்பெயரெச்சம் வடிவமென்னும் பெயரோடு முடிந்தது.

மழுப்படையின்பெயர்-பரசு,நவியம்,தண்ணம்,பாலம்,கணிச்சி. ரு.
சக்கரத்தின்பெயர்—நேமி, பரிதி, வலயம், எஃகம், சுதரிசனம், ஆழி, ஒளிவட்டம், திகிரி, வளை. கூ.

வில்லின்பெயர்—தனு, சிந்துவாரம், தடி, சராசனம், கோதண்டம், சிலை, த்ரோணம், சாபம், கொடுமரம், வேணு, முனி, தவர், சராரோபம், கார்முகம். கச.
மால்வில்லின்பெயர்-சார்ங்கம். க. ஈசன்வில்லின்பெயர்-பினாகம்.க

நாணியின்பெயர்—பூரி, தொடை, ஆவம், பூட்டு, சிஞ்சினி, நரம்பு, நாரி, வடம், குணம். கூ.
அம்பின்பெயர்—சரம், வாளி, கணை, பகழி, வண்டு, கதிரம், கங்கபத்திரம், அத்திரம், கோல். கூ.

பாணம், ஆசுகம், பூதை, பத்திரி, விசிகம், புங்கம், தோணி, சாயகம், பல்லம், தொடை, சிலீமுகம், ஏ. கஉ. (ஆ உக.)
அம்புக்கட்டின்பெயர்-புதை. க. அம்புக்குப்பியின்பெயர்-புழுகு.க.
அம்புக்குதையின்பெயர்—குலை, புங்கம். உ.
மொட்டம்பின்பெயர்—உதண். க.

ஆவமேதூணியாவநாழிகையம்புக்கூடாம்
கோவைசெய்வில்லிலிட்டகுதைதானுங்குலையென்றோதும்
மேவியவுடுவேயீர்க்கில்விரவியசிறகாமம்பு
பாவகமாகக்கட்டும்பாசம்பற்றுக்கையாமே. (சு)

அயில்சத்தியெஃகஞாங்கருடம்பிடியைந்தும்வேலாம்
வயிரமேகுலிசஞ்சம்பம்வச்சிராயுதத்தின்பேரே
சயமுறுமசனியென்றுஞ்சதகோடியென்றுஞ்சாற்றும்
குயமொடுபுள்ளமற்றைக்கொடுவாளேயரிவாளின்பேர். (எ)

கழுமுளேகழுக்கடைப்பேர்கைப்பிடிவாளேகண்டம்
கழுமுண்மூவிலைவேல்காளங்கழுவொடுசத்திசூலம்
சுழல்படைவட்டம்பாராவளையெனச்சொல்லுமிப்பால்
எழுவென்பகணையத்தோடேபரிகமுமென்னலாமே. (அ)

அசிநவிரேதிநாட்டமானநாந்தகமேகட்கம்
வசிமட்டாயுதந்துவத்திவஞ்சமேயுவணிகோணம்
இசையுங்கண்டகம்வாள்வேணுகரவாளமென்றுமேற்கும்
நசையுறுகோணமென்பநாட்டியகூன்வாளாமே. (கூ)

கொண்டெழுமுடைவாளின்பேர்குறும்பிடிசுரிகையாகும்
பிண்டிபாலத்தினமம்பீலித்தண்டெஃகமும்பேர்
விண்டடரிட்டியீட்டிவிட்டேற்றின்பேரேகோலாம்
தண்டிற்றுறிருப்புமுள்ளாஞ்சலாகைநாராசமாமே. (க0)

குந்தமேபடையைவெல்லுங்கொடுஞ்சிறுசவளமென்ப
குந்தந்தோமரமிரண்டுங்கொடும்பெருஞ்சவளமாகும்
வந்தவேதினமேயீரும்வாள்கரபத்திரமும்பேர்
உந்தியதறிகைதானேகணிச்சியாமுளிக்கும்பேரே. (கக)

கவிபுகழ்கைவேலின்பேர்கப்பணந்தோமரந்தான்
நவியமேமழுக்கோடாலிநாட்டியகுடாரமும்பேர்
குவியிலைமுக்கரிந்தகத்தியேகுளிரென்றோதும்
சுவரகழ்கருவிநாமஞ்சொன்னபேர்கன்னமாமே. (கஉ)

தடிகதையெறுழேதண்டாந்தட்டையுந்தழலுங்கிள்ளை
கடிகருவிப்பேராகுங்குணில்குறுந்தடிப்பேர்காட்டும்
கொடியதோர்கவணிறுமங்குணிலொடுகவணையோடே
ஒடிசிலுங்குளிருமென்றேயுரைத்திடலாகுமென்ப. (கங)

அம்புக்கூட்டின்பெயர்—ஆவம், தூணி, ஆவநாழிகை. ௩.
விற்குதையின்பெயர்—குலை. க.
அம்புச்சிறகின்பெயர்—உடு, ஈர்க்கில். உ.
அம்புகட்டும்பாசத்தின்பெயர்—பற்றுக்கை. க.

வேலாயுதத்தின்பெயர்-அயில்,சத்தி,எஃகம்,ஞாங்கர்,உடம்பிடி. ரு.
வச்சிராயுதத்தின்பெயர்—வயிரம், குலிசம், சம்பம், அசனி, சதகோடி. ரு.
அரிவாளின்பெயர்—குயம், பூள்ளம், கொடுவாள். ௩.

கழுக்கடையின்பெயர்—கழுமுள். க. கைவாளின்பெயர்-கண்டம். க.
சூலத்தின்பெயர்—கழுமுள், மூவிலைவேல், காளம், கழு, சத்தி. ரு.
சுழல்படையின்பெயர்—வட்டம், பாராவளை. உ.
எழுவின்பெயர்—கணையம், பரிகம். உ.

வாளின்பெயர்—அசி, நவிர், ஏதி, நாட்டம், நாந்தகம், கட்கம், வசி, மட்டாயுதம், தூவத்தி, வஞ்சம், உவணி, கோணம், கண்டகம், வேணு, கரவாளம். கரு.
கூன்வாளின்பெயர்—கோணம். க.

உடைவாளின்பெயர்—குறும்பிடி, சுரிகை. உ.
பிண்டிபாலத்தின்பெரர்—பீலித்தண்டு, எஃகம். உ.
ஈட்டியின்பெயர்—இட்டி. க. விட்டேற்றின்பெயர்—கோல். க.
இருப்புமுள்ளின்பெயர்-தாறு. க. நாராசத்தின்பெயர்-சலாகை. க.

சிறுசவளத்தின்பெயர்—குந்தம். க.
பெருஞ்சவளத்தின்பெயர்—குந்தம், தோமரம். உ.
ஈர்வாளின்பெயர்—வேதினம், கரபத்திரம். உ.
தறிகையின்பெயர்—கணிச்சி. க. உளியின்பெயர்—கணிச்சி. க.

கைவேலின்பெயர்—கப்பணம், தோமரம். உ.
கோடாலியின்பெயர்—நவியம், மழு, குடாரம். ௩.
இலைமூக்கரிகத்தியின்பெயர்—குளிர். க.
சுவரகழ்கருவியின்பெயர்—கன்னம். க.

தண்டின்பெயர்—தடி, கதை, எறுழ். ௩.
கிளிகடிகருவியின்பெயர்—தட்டை, தழல். உ.
குறுந்தடியின்பெயர்—குணில். க.
கவணின்பெயர்—குணில், கவணை, ஒடிசில், குளிர். ௪.

ஏசிலஞ்சனக்கோல்கோலாந்தூலிகையெழுதுகோலே
சூசியேயூசியென்பசொற்றவூசித்தூளைப்பேர்
பாசமாமோலைதீட்டும்படைகண்டத்துடனேயாணி
ஊசியேயெழுத்தாணிப்பேரிலேகணியென்றுமோதும். (கச)

தைத்திடுந்தொடர்துவக்கேயிடங்கணிசங்கிலிப்பேர்
வைத்தகற்பொறியேயள்ளுவலிபெறப்பற்றிரும்பாம்
அத்திரமென்பதம்பேயாதியாவிடுபடைப்பேர்
சத்திரமென்பசெங்கைத்தலம்விடாப்படையினாமம். (கரு)

படைதானைகழுமுளேவேல்பணைக்கலஞ்சுதனந்துப்புக்
கடுமேதிகருவியெஃகங்கூடியுமாயுதப்பொதுப்பேர்
அடைவாம்வைநிசிதம்பூவள்ளயில்வசியாறுங்கூர்மை
தடெருடுகருவிப்புட்டில்படையுறைநுதிநுனிப்பேர். (கசு)

கருதியகோதையேகைக்கட்டிகைப்புடையுமாகும்
சிரகங்கீசகமிரண்டுஞ்செப்பியதலைத்திராணம்
அரணஞ்சாலிகைசடாரியாசுகந்தளமேகண்டம்
பருமமெய்யுறையேகச்சைபரம்பத்துங்கவசப்பல்பேர். (கஎ)

சேடகங்கடகந்தட்டிசேரும்வேதிகையேவட்டம்
கேடகந்தோலினோடுகிடுகெட்டும்பலகையின்பேர்
சூடுந்தோற்பலகைதட்டுத்தோற்பரந்தோலுமாகும்
நீடியபரிசையேமாவட்டணநெடியவட்டம். (கஅ)

நிலைபெறுபிரம்பின்வட்டநீள்வள்ளித்தண்டையாகும்
மலைவின்மந்தனமேசூழிமதயானைமுகபடாப்பேர்
கலைவிலாப்புரசைதூசாங்கழுத்திடுகயிறேகச்சை
இலகடம்பலகாரங்கள்யானைமேற்றவிசினாமம். (கக)

பரியினிற்கலணையின்பேர்பகர்ந்திடிற்பாமும்பண்ணும்
பருமமும்படையும்பன்னும்பல்லணந்தானுமாகும்
பரவியகச்சமோடுபடியங்கவடியின்பேரே
மருவுசம்மட்டியேகோல்வாய்த்தமத்திகையுமப்பேர். (உ0)

மறுவறுகுதிரைவாயின்வடம்வடிகயிறுவற்கம்
கறுழொடுகலியங்கௌவுங்கடிவாளங்கலினமும்பேர்
நிறுவிமற்றதற்கணிந்தநெடுமயிருளையென்றோதும்
செறிபுனைதளைவிலங்காஞ்சிருங்கலைநிகளமும்பேர். (உக)

அஞ்சனக்கோலின்பெயர்—கோல். க. எழுதுகோலின்பெயர்-தூலிகை.க.ஊசியின்பெயர்-சூசி.க.ஊசித்துளையின்பெயர்-பாசம்.க
எழுத்தாணியின்பெயர்—ஓலைதீட்டும்படை, கண்டம், ஆணி, ஊசி, இலேகனி. ரு.

சங்கிலியின்பெயர்—தொடர், துவக்கு, இடங்கணி. ங.
பற்றிரும்பின்பெயர்—கற்பொறி, அள். உ.
கைவிடுபடையின்பெயர்—அத்திரம். க.
கைவிடாப்படையின்பெயர்—சத்திரம். க.

ஆயுதப்பொதுப்பெயர்—படை, தானை, கழுமுள், வேல், படைக்கலம், சுதனம், துப்பு, ஏதி, கருவி, எஃகம். க0.
கூர்மையின்பெயர்-வை,நிசிதம்,பூ,வள்,அயில்,வசி. கூ. படையுறையின்பெயர்-தடறு, கருவிப்புட்டில். உ. நுனியின்பெயர்-நுதி.க.

கைக்கட்டியின்பெயர்—கோதை, கைப்புடை. உ.
* தலைத்திராணத்தின்பெயர்—சிரகம், கீசகம். உ.
கவசத்தின்பெயர்—அரணம், சாலிகை, சடாரி, ஆசு, கந்தளம், கண்டம், பருமம், மெய்யுறை, கச்சை, பரம். க0.

பலகையின்பெயர்—சேடகம், கடகம், தட்டி, வேதிகை, வட்டம், கேடகம், தோல், கிடுகு. அ.
தோற்பலகையின்பெயர்—தட்டு, தோற்பரம், தோல். ங.
பரிசையின்பெயர்—மாவட்டணம், நெடியவட்டம். உ.

பிரம்பின்வட்டத்தின்பெயர்—வள்ளித்தண்டை. க.
யானைமுகபடாத்தின்பெயர்—மந்தனம், சூழி. உ.
யானைப்புரசையின்பெயர்—தூசு. க. யானைக்கழுத்திடுகயிற்றின்பெயர்-கச்சை.க.யானைமேற்றவிசின்பெயர்-இலகடம்,பலகாரம். உ.

குதிரைக்கலணையின்பெயர்-பரம்,பண்,பருமம்,படை,பல்லணம். ரு.
குதிரையங்கவடியின்பெயர்—கச்சம், படி. உ.
குதிரைச்சம்மட்டியின்பெயர்—கோல், மத்திகை. உ.

குதிரைவாயின்வடத்தின்பெயர்—வடிகயிறு, வற்கம். உ.
குதிரைக்கடிவாளத்தின்பெயர்—கறுழ், கலியம், கலினம். ங.
குதிரைக்கணிமயிரின்பெயர்—உளை. க.
விலங்கின்பெயர்—புனை, தளை, சிருங்கலை, நிகளம். ச.

* தலைத்திராணம்—தலைச்சீரா.

 ஏழாவது செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி.

சூடிகைசேகரங்கிரீடஞ்சூடிகையகுடமௌலி
முடியின்பேரோராறுகுமுடிமாலையேகரோடி
முடியுறுப்பைந்தாந்தாமமுகுடமேபதுமத்தோடு
நெடியகோடகமேமற்றுநேர்ந்தகிம்புரியென்றுமே. (௨௨)

அம்பொனாரம்பதக்கங்கண்டிகைமதாணியும்பேர்
செம்பொனங்கதங்கேயூரந்திகழ்வாகுவலயத்தின்பேர்
பம்புதாடங்கந்தோடாம்பகர்குழைகுண்டலப்பேர்
கம்பிவல்லிகைகுணுக்குக்கடிப்பிணைகாதணிப்பேர். (௨௩)

கருதுகங்கணத்தினுமங்கடகமேதொடியுமாகும்
சரிதொடிகுருகுவண்டுசங்குசூடகமேகன்று
பெருகுகைவளையாம்பிள்ளைக்கைவளைபிடிகமென்ப
விரவியசுடிகைசுட்டிவிட்டொளிரோடைபட்டம். (௨௪)

பரிபுரமென்பதானேபாதகிங்கிணியினுமம்
பெரியநூபுரஞ்சிலம்பிற்பேதமேவேறொன்றில்லை
பரியகங்காற்சரிப்பேர்பகர்ந்தகைச்சரிக்கும்பேரே
அரவமேசிலம்பினுமமாஞ்சிறுமணிசதங்கை. (௨௫)

நீடுபாடகத்தினுமநெடும்பாதகடகமென்ப
தேடியகுடச்சூலோசைசெய்தளைநெகிழமும்பேர்
பாடுறுபாதசாலம்பதத்தணிப்பொதுப்பேராகும்
ஆடவர்கொடைவீரத்தாலணிவதுகழலென்றுமே. (௨௬)

எழுகோவைகளாற்சூழ்ந்தவெழின்மணிமேகலைப்பேர்
காழிருநான்கேகாஞ்சிகலாபமீரெட்டுத்தாமம்
தாழுமூவாறுகோவைசாற்றியபருமமென்ப
வீழுமெண்ணான்குகோவைவிரிசிகையென்பதாமே. (௨௭)

சரிமணிநாமந்தானேசாற்றியகலாபந்தோரை
அரையினிற்பட்டிகைப்பேரத்தொடுமனுவுமென்பர்
இரதனமரைநாணின்பேரேற்றிடுந்தொங்கலுத்தி
மருவியசெவிமலர்ப்பூமன்னுகன்னவதஞ்சம். (௨௮)

முடியின்பெயர்—சுடிகை, சேகரம், கிரீடம், சூடிகை, மகுடம். மௌலி. சு. முடிமாலையின்பெயர்—கரோடி. க.
முடியுறுப்பைந்தாவன—தாமம், முகுடம், பதுமம், கோடகம். கிம்புரி.

பதக்கத்தின்பெயர்—ஆரம், கண்டிகை, மதாணி. ௩,
வாகுவலயத்தின்பெயர்—அங்கதம், கேயூரம், உ,
தோட்டின்பெயர்—தாடங்கம்.க.குண்டலத்தின்பெயர்—குழை.க.
காதணியின்பெயர்—கம்பிசு வல்லிகை, குணுக்கு, கடிப்பிணை. ச.

கங்கணத்தின்பெயர்—கடகம், தொடி. உ.
கைவளையின்பெயர்—சரி, தொடி, குருகு, வண்டு, சங்கு, சூடகம், கன்று. எ. பிள்ளைக்கைவளையின்பெயர்—பிடிகம். க.
சுட்டியின்பெயர்—சுடிகை. க. பட்டத்தின்பெயர்—ஓடை. க.

பாதகிங்கிணியின்பெயர்—பரிபுரம். க.
நூபுரமாவது சிலம்பின்பேதம்.
காற்சரியின்பெயர்—பரியகம். க.
கைச்சரியின்பெயர்—பரியகம். க.
சிலம்பின்பெயர்—அரவம். க. சதங்கையின்பெயர்—சிறுமணி. க.

பாடகத்தின்பெயர்—பாதகடகம். க.
ஓசைசெய்தளையின்பெயர்—குடச்சூல், ஞெகிழம். உ.
பதத்தணிப்பொதுவின்பெயர்—பாதசாலம். க.
ஆடவர்கொடையினும்வீரத்தினுமணிவதின்பெயர்—கழல். க.

எழுகோவைமணியின்பெயர்—மேகலை. க.
எட்டுக்கோவைமணியின்பெயர்—காஞ்சி. க.
பதினறுகோவைமணியின்பெயர்—கலாபம். க.
பதினெட்டுக்கோவைமணியின்பெயர்—பருமம். க.
முப்பத்திரண்டுகோவைமணியின்பெயர்—விரிசிகை. க.

சரிமணியின்பெயர்—கலாபம், தோரை. உ.
அரைப்பட்டிகையின்பெயர்—அத்து, மனு. உ.
அரைநாணின்பெயர்—இரதனம். க.
ஆபரணத்தொங்கலின்பெயர்—உத்தி. க.
செவிமலர்ப்பூவின்பெயர்—கன்னவதஞ்சம். க.

விரலணியாழிவீகமிலச்சினைமோதிரப்பேர்
சரமொடுகாழேயாரந்தாமமேமணிவடப்பேர்
மருவுசங்கிலியேயென்பவயிரச்சங்கிலியினுமம்
உருவியன்மார்பிலிட்டவுபவீதம்பூணுநூலே. (உகூ)

இலம்பகம்புல்லகஞ்சுட்டிவைநுதலணிமுப்பேரே
பொலம்புனைதிருவேதெய்வவுத்தியாம்பிஞ்ஞகந்தான்
துலங்கியதலைக்கோலப்பேர்தொய்யகந்தலைப்பாளைப்பேர்
குலம்பெறுகல்லழுத்துங்குழிவட்டங்கேவணந்தான். (ஙo)

அணிகளின்கடைப்புணர்ப்பேயதுமடைகயிலுமாகும்
புணருங்கோளகையேதாங்கிவயிரங்கிம்புரிபூணுற்பேர்
அணிகலன்வள்ளிபூணேயணியொடுகலமேமஞ்சு
பணியிழைபூடணங்கள்பகரிலாபரணமாமே. (ஙக)

தட்டம்பாசனமேதாலந்தளிகையுண்கலத்தின்பேரே
வட்டிலேசடகங்கோரம்வள்ளமாஞ்சிறுவட்டிற்பேர்
கிட்டியகிண்ணங்கன்னல்கிளந்தநாழிகைவட்டிற்பேர்
சட்டுவஞ்சிலகமென்பதவ்வியுந்தருவியும்பேர். (ஙஉ)

விஞ்சுதர்ப்பணமேயாடிமிகுமொளிவட்டம்வேறு
வஞ்சியருருவங்காட்டவரும்படிமக்கலம்பொற்
கஞ்சனமுகுரமத்தம்புளகமெண்பேர்கண்ணாடி
கஞ்சனைகலசப்பானைபடியகம்படிக்கங்காட்டும். (ஙங)

தொட்டநெய்த்துடுப்பினுக்குச்சுருக்கொடுசுருவமாம்பேர்
இட்டமாந்தூபமுட்டியிந்தளந்தடவுமேற்கும்
மட்டமர்கின்றதூபமணியேகைம்மணியென்றுரும்
கிட்டியேபாண்டில்கஞ்சங்கிணியென்னுந்தாளமுப்பேர். (ஙச)

அடிபடுபெருமணிப்பேரறைந்திடுங்கண்டையாகும்
படலிகைபரந்தவட்டங்கைம்மணிபகர்ந்தபேரே
திடுதிடென்றிடத்தெழித்தசேகண்டியெறிமணிப்பேர்
கடுகியபீலிசின்னங்காளங்காளமாமே. (ஙரு)

கோடுடனிரலையாம்பல்கொம்பின்பேர்வயிருங்கூறும்
பீடிகைதுமானங்காண்டம்பேணுங்கண்டிகைகடிப்பம்
கோடிகமிருமுப்பேர்பூண்கொள்கலம்பரணிகோயே
நீடுமஞ்சிகமேபெட்டிநெடியமஞ்சிகையேபேழை. (ஙசு)

மோதிரத்தின்பெயர்—விரலணி, ஆழி, வீகம், இலச்சினை. ச.
மணிவடத்தின்பெயர்—சரம், காழ், ஆரம், தாமம். ச.
வயிரச்சங்கிலியின்பெயர்—சங்கிலி. க.
பூணுநூலின்பெயர்—உபவீதம். க.

நுதலணியின்பெயர்—இலம்பகம், புல்லகம், சூட்டு. ங.
தெய்வவுத்தியின்பெயர்-திரு.க.தலைக்கோலத்தின்பெயர்-பிஞ்ஞகம்
தலைப்பாளையின்பெயர்—தொய்யகம். க.
கல்லழுத்தாங்குழிவட்டத்தின்பெயர்—கேவணம். க.

அணிகளின்கடைப்புணர்வின்பெயர்—மடை, கயில். உ.
பூணின்பெயர்—கோளகை, தாங்கி, வைரம், கிம்புரி. ச.
ஆபரணத்தின்பெயர்—அணிகலன், வள்ளி, பூண், அணி, கலம், மஞ்சு, பணி, இழை, பூடணம். கூ.

உண்கலத்தின்பெயர்—தட்டம், பாசனம், தாலம், தளிகை. ச.
வட்டிலின்பெயர்—சடகம், கோரம், வள்ளம். ங.
சிறுவட்டிலின்பெயர்—கிண்ணம். க.
நாழிகைவட்டிலின்பெயர்—கன்னல். க.
சட்டுவத்தின்பெயர்—சிலகம், தவ்வி, தருவி. ங.

கண்ணாடியின்பெயர்—தர்ப்பணம், ஆடி, ஒளிவட்டம், படிமக்கலம், கஞ்சனம், முகுரம், அத்தம், புளகம். அ.
கலசப்பானையின்பெயர்—கஞ்சனை.க.படிக்கத்தின்பெயர்—படியகம்

நெய்த்துடுப்பின்பெயர்—சுருக்கு, சுருவம். உ.
தூபமுட்டியின்பெயர்—இந்தளம், தடவு. உ.
தூபமணியின்பெயர்—கைம்மணி. க.
தாளத்தின்பெயர்—கிட்டி, பாண்டில், கஞ்சம். ங.

பெருமணியின்பெயர்—கண்டை. க.
கைம்மணியின்பெயர்—படலிகை, பரந்தவட்டம். உ.
எறிமணியின்பெயர்—சேகண்டி. க.
சின்னத்தின்பெயர்—பீலி. க. காளத்தின்பெயர்—காகளம். க.

கொம்பின்பெயர்—கோடு, இரலை, ஆம்பல், வயிர். ங.
பூண்கொள்கலத்தின்பெயர்—பீடிகை, தமானம், காண்டம், கண்டிகை, கடிப்பம், கோடிகம். கூ. பரணியின்பெயர்—கோய். க.
பெட்டியின்பெயர்—மஞ்சிகம். க. பேழையின்பெயர்-மஞ்சிகை.க.

குண்டிகைகரகநீர்பெய்கோலமார்காண்டகங்கள்
கண்டநற்கமண்டலப்பேர்கடிப்பங்கோடிகமேகெண்டி
கொண்டவெண்குடையினாமங்குளிர்தோங்கல்கவிப்புப்பிச்சம்
தண்டுசேர்கவிகையாதபத்திரஞ்சத்திசத்திரம். (௩௭)

ஆலவட்டத்தினோடுமடுத்திடுங்கால்செய்வட்டம்
மேலிடுமுக்கந்தாலவிருந்தம்பேராலவட்டம்
பீலிவீசனஞ்சாந்தாற்றிபெருகியவிசிறிநான்கும்
சீலமாங்காற்றுவீசுஞ்சிற்றாலவட்டந்தானே. (௩௮)

இடக்கையின்பேரேயாமந்திரிகையாங்குளிர்முழாவாம்
படித்தெழுபணவந்திண்டியானகம்படகமுப்பேர்
கடிப்பின்பேர்குணிலாமோந்தைதானொருகட்பறைப்பேர்
அடித்தபேரிகைப்பேர்நந்தியாகுளிசிறுபறைப்பேர். (௩௯)

சல்லரிதிமிலையென்பதண்ணுமைநிசாளமாகும்
பல்லுளகொடியபன்றிப்பறைகுடப்பறையென்றுமே
கல்லெனும்பகுவாயாமோர்கட்பறைபதலைதானே
ஒல்லெனுங்கரடிநாமமுறுபறைதட்டையாமே. (௪௦)

தொண்டகமுருகியம்போர்த்துடிகுறிஞ்சிப்பறைப்பேர்
மிண்டியதுடியேபாலைவேடர்தம்பறையினாமம்
கொண்டெழுபம்பையேறங்கோட்பறைமுல்லைக்காகும்
கிண்டியமருதமுற்றகிளர்பறைகிணையென்றுமே. (௪௧)

நிறுவுசாப்பறையேயென்பநெய்தலிற்பறையினாமம்
பெறுமுவகைப்பறைக்குப்பேரேதூரியமென்றோதும்
உறுமியதண்ணுமைப்பேருடுக்கையாமிடைசுருங்கு
பறையின்பேர்துடிமருங்கின்மார்ச்சனைபகரின்மண்ணும். (௪௨)

தூரியமுழவுதிண்டிதுந்துபிமுருடுதக்கை
பேரியேதகுணிச்சம்போர்ப்பீலியேதடாரிபம்பை
வீரியமுரசுதண்ணமேவுகோடணையியங்கள்
வாரியினதிர்சகண்டைவாச்சியப்பொதுவீரெண்பேர். (௪௩)

இரதமேகொடிஞ்சியோடுமியந்திரங்குயவுவையம்
அரியொடுகூவிரந்தேராஞ்சயந்தனமுமப்பேர்
பரிதியேசில்லியாழிபாரியகாலேநேமி
உருளுடனுருளிதேரினுருளென்பவுந்தியும்பேர். (௪௪)

கமண்டலத்தின்பெயர்—குண்டிகை, கரகம், காண்டகம். ங.
கெண்டியின்பெயர்—கடிப்பம், கோடிகம். உ.
வெண்குடையின்பெயர்—குளிர், தொங்கல், கவிப்பு, பிச்சம், கவிகை, ஆதபத்திரம், சத்தி, சத்திரம். அ.

பேராலவட்டத்தின்பெயர்—ஆலவட்டம், கால்செய்வட்டம், உக்கம், தாலவிருந்தம். ச.
சிற்றாலவட்டத்தின்பெயர்—பீலி, வீசனம், சாந்தாற்றி, விசிறி. ச.

இடக்கையின்பெயர்—ஆமந்திரிகை. க. முழவின்பெயர்—குளிர். க.
படகத்தின்பெயர்—பணவம், திண்டி, ஆனகம். ங.
கடிப்பின்பெயர்-குணில். க. ஒருகட்பறையின்பெயர்-மொந்தை. க.
பேரிகையின்பெயர்—நந்தி. க. சிறுபறையின்பெயர்—ஆகுளி. க.

திமிலையின்பெயர்—சல்லரி. க. நிசாளத்தின்பெயர்—தண்ணுமை. க.
பன்றிப்பறையின்பெயர்—குடப்பறை. க.
ஒருகட்பகுவாய்ப்பறையின்பெயர்—பதலை. க.
கரடிப்பறையின்பெயர்—தட்டை. க.

குறிஞ்சிப்பறையின்பெயர்—தொண்டகம், முருகியம், துடி. ங.
பாலைப்பறையின்பெயர்—துடி. க.
முல்லைப்பறையின்பெயர்—பம்பை, ஏறங்கோட்பறை. உ.
மருதப்பறையின்பெயர்—கிணை. க.

நெய்தற்பறையின்பெயர்—சாப்பறை. க.
உவகைப்பறையின்பெயர்—தூரியம். க.
தண்ணுமையின்பெயர்—உடுக்கை. க.
இடைசுருங்குபறையின்பெயர்—துடி. க.
மார்ச்சனையின்பெயர்—மண். க.

வாச்சியப்பொதுவின்பெயர்—தூரியம், முழவு, திண்டி, துந்துபி, முருடு, தக்கை, பேரி, தகுணிச்சம், பீலி, தடாரி, பம்பை, முரசு, தண்ணம், கோடணை, இயம், சகண்டை. கசு.

தேரின்பெயர்—இரதம், கொடிஞ்சி, இயந்திரம், குயவு, வையம், அரி, கூவிரம், சயந்தனம். அ.
தேருருளின்பெயர்—பரிதி, சில்லி, ஆழி, கால், நேமி, உருள், உருளி, உந்தி. அ.

க௩-௬ ஏழாவது செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி.

ஆரெனுநாமந்தேரினகத்தினுட்செறிகதிர்ப்பேர்
தேர்நடுப்பேரேதட்டுச்செப்பியநாப்பணும்பேர்
சார்பலகைப்பாய்பாராஞ்சார்ந்தகூவிரங்கொடிஞ்சி
தேர்மொட்டுக்கூம்புதேரின்மரச்சுற்றுக்கிடுகுதானே. (௪௫)

பாண்டில்கஞ்சிகைவையம்போர்ப்பரிகள்பூண்டீர்க்குமூர்தி
தாண்டியசகடுவையஞ்சாகாடேயொழுகைசாடு
துண்டியவுருளிஞெடுசகடமுஞ்சொல்லும்பண்டி
ஈண்டியபண்டியுள்ளினிரும்புகந்திருசுமாமே. (௪௬)

விஞ்சியமுத்தினூர்திவெண்முத்தின்சிவிகைதானே
தஞ்சமாஞ்சிவிகைவையுந்தண்டிகையணிகம்யானம்
கஞ்சிகைமணிக்காற்பள்ளியென்பனகதிர்வேன்மன்னர்
எஞ்சலில்சிறப்பினேறுமிராசவாகனமதாமே. (௪௭)

அலமுழுபடைதொடுப்போடாலமேபடைவாணுஞ்சில்
கலனையேகலப்பையேழ்பேர்கந்தெழுமதலைதம்பம்
நிலைபெறுதறிகாருணுநெடுந்தூணும்வெளில்யானைத்தூண்
புலையில்வேள்வித்தூண்யூபம்போதிகைகுறுந்தறிப்பேர். (௪௮)

கதவின்பேரரரிவாரிகாப்பொடுகவாடந்தோட்டி
புதவுமாங்காழுஞ்சேப்பும்போற்றியகடிகையுந்தாழ்
மதமுறும்யானைதன்னைவணக்குமங்குசமேதோட்டி
விதமுறுகோணமென்றும்விளம்புவரளந்தநூலோர். (௪௯)

பட்டடையடைகுறட்டின்பாலதாமுளையாணிக்கோல்
சுட்டுக்கோலென்றுநாமஞ்சொல்லுபநல்லநூலோர்
முட்டியபெருங்குறட்டைமுருடெனமொழிபவோங்கிக்
கொட்டுஞ்சம்மட்டிகூடங்கோள்கொழுவென்றுகூறும். (௫௦)

பாதையேவங்கந்தோணிபாரதிபஃறியம்பி
போதமேமதலையானம்புணைசதாநௌவேநாவாய்
பேதமில்பாறுதொள்ளைபேணுறுமரக்கலப்பேர்
வாதைதீர்மரக்கலப்பாயிதையெனவழங்கலாமே. (௫௧)

பகடம்பிபஃறியோடம்பகர்பெயர்திமிலேதோணி
பகடுபட்டிகையேயம்பிபடுவையேபுணையேதெப்பம்
மிகைபடுமிதவையும்பேர்விசியின்பேரரியென்றாகும்
பகர்தருபர்ரிமஞ்சம்பரியங்கம்பாண்டில்கட்டில். (௫௨)

தேரினகத்திற்செறிகதிரின்பெயர்—ஆர். க.
தேர்நடுவின்பெயர்—தட்டு, நாப்பண். உ.
தேர்ப்பலகைப்பாவின்பெயர்—பார். க.
தேர்க்கொடிஞ்சியின்பெயர்—கூவிரம். க.
தேர்மொட்டின்பெயர்-கூம்பு. க.தேர்மரச்சுற்றின்பெயர்-ஙிடுகு.க.

பரிகள்பூண்டூர்க்குமூர்தியின்பெயர்—பாண்டில்,கஞ்சிகை,வையம்.
பண்டியின்பெயர்—சகடு, வையம், சாகாடு, ஒழுகை, சாடு, உருள், சகடம். எ. பண்டியுள்ளிரும்பின்பெயர்—கந்து, இருசு. உ.

முத்துச்சிவிகையின்பெயர்—முத்தினூர்தி. க.
சிவிகையின்பெயர்—வையம், தண்டிகை, ஆனிகம், யானம். ச.
இராசவாகனத்தின்பெயர்—கஞ்சிகை, மணிக்காற்பள்ளி. உ.

கலப்பையின்பெயர்—அலம், உழுபடை, தொடுப்பு, ஆலம், படை வாள், நாஞ்சில், கலனை. எ.
தூணின்பெயர்—கந்து, மதலை, தம்பம், தறி, கால், தாணு. சு.
யானைத்தூணின்பெயர்—வெளில். க.
வேள்வித்தூணின்பெயர்-யூபம்.க.குறுந்தறியின்பெயர்-போதிகை.

கதவின்பெயர்—அரரி, வாரி, காப்பு,*கவாடம்,தோட்டி, புதவு.சு.
தாழின்பெயர்—காழ், சீப்பு, கடிகை. ங.
யானைத்தோட்டியின்பெயர்—அங்குசம், கோணம். உ.

அடைகுறட்டின்பெயர்—பட்டடை. க.
உலையாணிக்கோலின்பெயர்—சுட்டுக்கோல். க.
பெருங்குறட்டின்பெயர்—முருடு. க.
சம்மட்டியின்பெயர்—கூடம். க. கொழுவின்பெயர்—கோள். க.

மரக்கலத்தின்பெயர்—பாதை, வங்கம், தோணி, பாரதி, பஃறி, அம்பி, போதம், மதலை, யானம், புணை, சதா, நௌ, நாவாய், பாறு, தொள்ளை. கரு.
மரக்கலப்பாயின்பெயர்—இதை. க.

ஓடத்தின்பெயர்-பகடு,அம்பி,பஃறி.ங.தோணியின்பெயர்-திமில்.க.
தெப்பத்தின்பெயர்-பகடு,பட்டிகை,அம்பி,படுவை,புணை,மிதவை.சு.
விசியின்பெயர்—அரி. க.
கட்டிலின்பெயர்—பாரி, மஞ்சம், பரியங்கம், பாண்டில். ச.

---

* கபாடமெனினுமொக்கும்.

விட்டரந்தவத்தோர்பீடம்விளங்கும்பீடிகையுமப்பேர்
இட்டசிங்காதனம்பத்திராசனமென்பதாமே
திட்டையேகறையேமற்றுச்செப்பியவுலூகலந்தான்
முட்டியவுரலின்முப்பேர்முசலமேதடியுலக்கை. (௫௩)

உறிசிதர்சிக்கந்தூக்கோடோதியசிமிலிநாற்பேர்
நிறுவியவுஞ்சலூசனீண்டவிண்டாண்டுமப்பேர்
இறைவையேசேணியேணிமால்புகண்ணேணியின்பேர்
குறைவிலம்பணந்தூம்போடுகுளகங்கச்சமுமரக்கால். (௫௪)

விரவியகுஞ்சநாழிவிரித்தகொத்தளிப்பாயாரை
பெருகியசாப்பைபுற்பாய்பிரப்பம்பாய்சாதிப்பாயாம்
சருமந்தோற்பாய்தடுக்கேதவிசாகுங்குழாயேதண்டாம்
பெருகுகோடிகம்பூந்தட்டேபெட்டியேமூழிவாயாம். (௫௫)

சட்டமேகிடுகாமென்பசாற்றியகம்பந்தம்பம்
விட்டொளிர்கௌசிகங்கண்மத்திகைவிளக்குத்தண்டாம்
தட்டொடுசின்னஞ்சேட்டைதருமுறமுற்றிலும்பேர்
புட்டிலேயிறைவையென்பவட்டிகைகூடையாமே. (௫௬)

சுளகின்பேர்சூர்ப்பமென்பதுடைப்பஞ்சோதனிமாறும்பேர்
வளமுறுமூழிமூழையகப்பையாமத்துமத்தம்
வெளிறயிர்கடைதறிப்பேர்மெச்சும்பாவாற்றிகுச்சாம்
அளவில்காருகர்நாடாநாழியேயாகுமென்ப. (௫௭)

கிழார்பூட்டைகாம்பியம்பிகிளந்தகாராம்பியாகும்
பிழாரிடாரிறைகூடைப்பேர்பெருந்தூம்பம்பணநீர்ப்பத்தர்
துழாவியகாசுவல்லுச்சூதின்பேர்கழங்குமாகும்
தழாதருள்கவற்றிற்றாயமாயமாஞ்சாரிநாயாம். (௫௮)

கடிகையேதுணியேதுண்டங்காட்டியவகிர்வார்வள்ளாம்
சுடுவொடுசுமடுதாங்குஞ்சுமையடைசும்மாட்டின்பேர்
வடிவுறுவலையேசாலமற்றதிற்கயிறுமாமே
தொடருறுநூலேதந்துசூத்திரம்பனுவலும்பேர். (௫௯)

தவத்தோர்பீடத்தின்பெயர்—விட்டரம், பீடிகை. உ.
சிங்காதனத்தின்பெயர்—பத்திராசனம். க.
உரலின்பெயர்—திட்டை, கறை, உலூகலம். ௩.
உலக்கையின்பெயர்—முசலம், தடி. உ.

உறியின்பெயர்—சிதர், சிக்கம், தூக்கு, சிமிலி. ௪.
உஞ்சலின்பெயர்—ஊசல், விண்டாண்டு. உ.
ஏணியின்பெயர்—இறைவை, சேணி. உ.
கண்ணேணியின்பெயர்—மாலப்பு. க.
மரக்காலின்பெயர்—அம்பணம், தூம்பு, குளகம், கச்சம். ௪.

நாழியின்பெயர்—குஞ்சம்.க.கொத்தளிப்பாயின்பெயர்—ஆரை. க.
புற்பாயின்பெயர்-சாப்பை.க.பிரப்பம்பாயின்பெயர்-சாதிப்பாய்.க
தோற்பாயின்பெயர்—சருமம். க. தடுக்கின்பெயர்—தவிசு. க.
குழாயின்பெயர்—தண்டு. க. பூந்தட்டின்பெயர்—கோடிகம். க.
பூப்பெட்டியின்பெயர்—மூழிவாய். க.

சட்டத்தின்பெயர்—கிடுகு. க.
விளக்குத்தண்டின்பெயர்—கம்பம்,தம்பம்,கௌசிகம்,மத்திகை.௪.
முறத்தின்பெயர்—தட்டு, சின்னம், சேட்டை, மூற்றில். ௪.
புட்டிலின்பெயர்—இறைவை. க. கூடையின்பெயர்-வட்டிகை. க.

சுளகின்பெயர்-சூர்ப்பம்.க.துடைப்பத்தின்பெயர்-சோதனி,மாறு.
அகப்பையின்பெயர்—மூழி, மூழை. உ.
மத்தின்பெயர்—மத்தம். க. தயிர்கடைதறியின்பெயர்-வெளில். க.
பாவாற்றியின்பெயர்—குச்சு. க. நூனூழியின்பெயர்—நாடா. க.

ஆம்பியின்பெயர்—*கிழார், பூட்டை, காம்பி, அம்பி. ௪.
இறைகூடையின்பெயர்—பிழார், இடார். உ.
நீர்ப்பத்தரின்பெயர்—தூம்பு, அம்பணம். உ.
சூதின்பெயர்—காசு, வல்லு, கழங்கு. ௩.
கவற்றிற்றுயத்தின்பெயர்—ஆயம். க. சாரியின்பெயர்—நாய். க.

துண்டத்தின்பெயர்-கடிகை,துணி.உ.வகிரின்பெயர்-வார், வள்.உ.
சும்மாட்டின்பெயர்—சுடுவு, சுமடு, சுமையடை. ௩.
வலையின்பெயர்—சாலம். க. வலைக்கயிற்றின்பெயர்—சாலம். க.
நூலின்பெயர்—தந்து, சூத்திரம், பனுவல். ௩.

* காராம்பி என்பாருமுளர்.

பழுதையேதாமங்கச்சைபாசமேயிரச்சேநாணே
வழுவிலாத்தாம்பேயக்கம்வடம்புரிகயிறதாமே
தழுவுதாமணியேதாம்புபசுக்கட்டுங்கயிறுதானாம்
சுழல்கறங்கேகாற்றாடிசொல்லியகதலியும்பேர். (௬0)

பந்துமட்டத்துருத்திபகர்பெருந்துருத்திநீரைச்
சிந்தியசிவிறியாகும்சீப்புக்கங்கதமேசிக்கம்
பைந்தொடிமகளிராடப்படுங்களமோரையென்ப
தொந்தமாம்பாதங்காப்புக்கழறொடுதோல்செருப்பாம். (௬௧)

இட்டபாதுகையேபாவன்மிதியடியிதன்மேலிட்ட
கொட்டையாங்குடைபுற்சீவுங்கோன்மெல்கோல்வளிசந்தூண்டில்
பட்டவம்மனையம்மானைபந்துகந்துகமென்றோதும்
முட்டையேதவிட்டினாமம்முடையுமாநொறுங்குநொய்யே. (௬௨)

ஊதியவுலைத்துருத்தியுதியுமத்திரியுமாகும்
கோதிலாச்சிவையினோடுகுருகுகொல்லுலைமூக்கின்பேர்
சோதனிசீக்குங்காடுதுரானரன்மயலேசெத்தை
சாதுயர்ப்பாடைவெள்ளில்சிலாவட்டஞ்சாணைக்கல்லே. (௬௩)

தடம்படுபதலைதாழிதளஞ்சாடியகளும்பேர்
இடங்கரேகிறையேவட்டமேற்றநீர்ச்சாலிம்மூப்பேர்
கிடந்தகர்ப்பரைதசும்புகடாகமாங்குடத்தினாமம்
குடங்கரேயிடங்கர்தாழிகுணங்கடங்கலசங்கும்பம். (௬௪)

தடாவொடுகரீரநீரைத்தருமுகைகுழிசிநான்கும்
மிடாவென்பபானையின்பேர்மேவியகுண்டத்தோடு
மிடாவுமாம்விரும்புநல்லார்வெண்டயிர்கடையுந்தாழி
விடாதமந்தினியினோடுகர்க்கரிவிளம்பலாமே. (௬௫)

சிரகங்கர்க்கரியேகன்னல்சீகரநான்குபேரும்
கரகத்தினாமமாகுங்கருதுவற்கரியுமென்ப
திருவறஞ்செய்யாரேற்குந்தீயமட்கலத்தினாமம்
பரவியகடிஞையையம்பாத்திரமென்றுமேற்கும். (௬௬)

இடிஞ்சிலேபாண்டிலென்பவெரிசுடர்த்தகழிநாமம்
ஒடுங்கியகுடுவைகுண்டமொளிபெறுவிசளைசட்டி
அடங்குசுத்திகையினோடுசராவமேயகலின்பேர்தான்
இடுங்கலம்பாண்டமேற்குங்கொள்கலமெவற்றிற்கும்பேர். (௬௭)

கயிற்றின்பெயர்—பழுதை, தாமம், கச்சை, பாசம், இரச்சு, நாண், தாம்பு, அக்கம், வடம், புரி. கய.
பசுக்கட்டுங்கயிற்றின்பெயர்—தாமணி, தாம்பு. உ.
காற்றுடியின்பெயர்—சுழல், கறங்கு, கதலி. ரு.

மட்டத்தூருத்தியின்பெயர்—பந்து.க. பெருந்துருத்தியின்பெயர்—சிவிறி. க. சீப்பின்பெயர்—கங்கதம், சிக்கம். உ.
மகளிராடுங்களத்தின்பெயர்—ஓரை. க.
செருப்பின்பெயர்—பாதங்காப்பு, கழல், தொடுதோல். ரு.

மிதியடியின்பெயர்—பாதுகை, பாவல். உ.
மிதியடியின்மேலிட்டகொட்டையின்பெயர்—குடை. க. பற்சீவுங்கோலின்பெயர்—மெல்கோல்.க. தூண்டிலின்பெயர்-வளிசம்.க.
அம்மானையின்பெயர்—அம்மனை. க. பந்தின்பெயர்—கந்துகம். க.
தவிட்டின்பெயர்-முட்டை,முடை.உ.நொய்யின்பெயர்-நொறுங்கு

உலைத்துருத்தியின்பெயர்—உதி, அத்திரி. உ.
கொல்லுலைமூக்கின்பெயர்—சிவை, குருகு. உ.
செத்தையின்பெயர்—காடு, தூரால், நரல், மயல். ச.
பாடையின்பெயர்—வெள்ளில். க.
சாணைக்கல்லின்பெயர்—சிலாவட்டம். க.

சாடியின்பெயர்—பதலை, தாழி, தளம், அகளம். ச.
நீர்ச்சாலின்பெயர்—இடங்கர், நிறை, வட்டம். ரு.
கர்ப்பரையின்பெயர்—தசும்பு, கடாகம். உ.
குடத்தின்பெயர்—குடங்கர், இடங்கர், தாழி, குணம், கடம், கலசம், கும்பம். எ.

மிடாவின்பெயர்—தடா, கீரம், முகை, குழிசி. ச.
பானையின்பெயர்—குண்டம், மிடா. உ.
தயிர்கடைதாழியின்பெயர்—மந்தினி, கர்க்கரி. உ.

கரகத்தின்பெயர்—சிரகம், கர்க்கரி, கன்னல், சீகரம், வற்கரி. ரு.
ஏற்குமட்கலத்தின்பெயர்—கடிஞை, ஐயம், பாத்திரம். ரு.

தகழியின்பெயர்—இடிஞ்சில், பாண்டில். உ.
குடுவையின்பெயர்—குண்டம். க. சட்டியின்பெயர்—விசனை. க.
அகலின்பெயர்—சுத்திகை, சராவம். உ.
கொள்கலம்யாவற்றிற்கும்பெயர்—இடுங்கலம், பாண்டம். உ.

கோடிகோடிகம்பட்டமேகோசிகங்கூறைபஞ்சி
சாடிகீவியமேசீரைசம்படங்கலைகலிங்கம்
சூடிகாடிகமேபுட்டந்துசுகாழகமேவட்டம்
ஆடையாவரணந்தானையறுவையம்பரமாசாரம். (சுஅ)

மடிபரிவட்டஞ்சேலைவத்திரமுடுக்கைவாசம்
இடையறுபுடைவையாறைந்திலக்காரமென்றும்பேராம்
இடையல்வேதகமேபட்டேயேடகமிவைதுகிற்பேர்
நடைபெறுநாகம்பாரிநல்லாடையிருபேராமே. (சுகூ)

பட்டுவர்க்கத்தினும்பரீளிதங்கோசிகம்பேர்
பட்டுநேத்திரமாங்காம்புபடுமதன்விகற்பநாமம்
இட்டநற்பணித்துசின்பேரேற்றிடுந்தேவாங்கந்தான்
மட்டமாமுரிகஞ்சூழுமயிரகமயிர்ப்படாமே. (எ0)

அத்தவாளந்தானேயுல்லாசமாம்வடகமும்பேர்
புத்தகமென்பசித்திரப்படாமாகும்போர்வைமீக்கோள்
வைத்தமுன்றானேதோகைமாதர்கொய்சகமேநீவி
உத்தரீயம்மேகாசமுத்தராசங்கமும்பேர். (எக)

கம்பலங்கம்பளங்கள்கம்பளிப்படாத்தின்வர்க்கம்
வம்புவார்விசிகைகச்சாம்வைத்தபட்டிகையுமாகும்
விம்புவட்டுடையுமப்பேர்விரிகஞ்சம்விடுந்தலைப்பாம்
கம்பலம்படங்குவானிவிதானமேற்கட்டியாமே. (எஉ)

கஞ்சுளியங்கிமற்றைக்காஞ்சுகமொடுகுப்பாயம்
விஞ்சுகஞ்சுகமேமெய்ப்பைமிளிரும்வாரணமேசட்டை
கஞ்சிகையவிடியோடுகாண்டமேயெழினிகண்டம்
தஞ்சமாம்படாம்படங்கள்சடிதியிலிடுதிரைப்பேர். (எங)

தவிசணைதளிமமெத்தையுபதானந்தலையணைப்பேர்
துவசமேசத்திவானிதோகைகேதனம்பதாகை
தவழ்விலோதனம்படங்குதரும்படாம்பெருங்கொடிப்பேர்
துவதூங்கால்வீதிக்கட்டிநுடங்கியகொடிவிடங்கம். (எச)

புடைவையின்பெயர்—கோடி, கோடிகம், படாம், கோசிகம், கூறை, பஞ்சி, சாடி, நீவியம், சீரை, சம்படம், கலை, கலிங்கம், சூடி, காடிகம், புட்டம், தூசு, காழகம், வட்டம், ஆடை, ஆவரணம், தானை, அறுவை, அம்பரம், ஆசாரம். உச.

மடி, பரிவட்டம், சேலை, வத்திரம், உடுக்கை, வாசம், இலக்காரம். எ. (ஆ. ருக.)

துகிலின்பெயர்—இடையல், வேதகம், பட்டு, ஏடகம். ச.

நல்லாடையின்பெயர்—நாகம், பாரி. உ.

பட்டுவர்க்கத்தின்பெயர்—பாளிதம், கோசிகம். உ.

பட்டின்பெயர்—நேத்திரம். க.

பட்டுவிகற்பத்தின்பெயர்—காம்பு. க.

நற்பணித்தூசின்பெயர்—தேவாங்கம். க.

மயிர்ப்படாத்தின்பெயர்—முரிகம், மயிரகம். உ.

அத்தவாளத்தின்பெயர்—உல்லாசம், வடகம். உ.

சித்திரப்படாத்தின்பெயர்—புத்தகம். க.

போர்வையின்பெயர்—மீக்கோள். க.

முன்றானையின்பெயர்—தோகை. க.

மாதர்கொய்சகத்தின்பெயர்—நீவி. க.

உத்தரீயத்தின்பெயர்—ஏகாசம், உத்தராசங்கம். உ.

கம்பளிப்படாத்தின்வர்க்கப்பெயர்—கம்பலம், கம்பளம். உ.

கச்சின்பெயர்—வம்பு, வார், விசிகை, பட்டிகை, வட்டுடை. ரு.

விடுந்தலைப்பின்பெயர்—கஞ்சம். க.

மேற்கட்டியின்பெயர்—கம்பலம், படங்கு, வானி, விதானம். ச.

சட்டையின்பெயர்—கஞ்சுளி, அங்கி, காஞ்சுகம், குப்பாயம், கஞ்சுகம், மெய்ப்பை, வாரணம். எ.

இடுதிரையின்பெயர்—கஞ்சிகை, அவிடி, காண்டம், எழினி, கண்டம், படாம், படம். எ.

மெத்தையின்பெயர்—தவிசு, அணை, தளிமம். ரு.

தலையணையின்பெயர்—உபதானம். க.

பெருங்கொடியின்பெயர்—துவசம், சத்தி, வானி, தோகை, கேதனம், பதாகை, விலோதனம், படங்கு, படாம். கூ.

வீதியிற்கட்டியகொடியின்பெயர்—விடங்கம். க.

கத்திகைசிறுகொடிப்பேர்கருதுகூவிரந்தேர்க்கட்டும்
சத்தியாந்துணிசிதாராஞ்சாற்றியசிதவலும்பேர்
சித்திரமோவியஞ்சேர்தீட்டும்வட்டிகையாமென்ன
வைத்தனர்பொறித்தறீட்டல்வரைதலுமெழுதலாமே. (எரு)

மற்றவற்கலையிறைஞ்சிமரவுரிசீரையும்பேர்
சுற்றலேயுடுத்தலென்பதற்றலேயிறுக்கலாகும்
குற்றமிலெழுபத்தாறுதொடர்செய்தான்குணபத்திரன்றாள்
நிற்றலும்வணங்கிநீதிநிறுத்தமண்டலவன்றனே. (எசு)

செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆக விருத்தம் — ருகூஉ.

---

எட்டாவது

# பண்புபற்றியபெயர்த்தொகுதி.

---

## காப்பு.

கடிமலர்ப்பிண்டிநீழற்காவலன்சரணம்போற்றி
வடிவினிலளவுதன்னில்வண்ணத்திற்காட்சியாகும்
நெடியதோர்பொருளின்மற்றுநீளுணர்வாலேகாணப்
படுபொருளின்குணப்பேர்ப்பண்பதாந்தொகுதிசொல்வாம். (க)

நல்லகோளகையேகொம்மைநாட்டியவலயந்தட்டுச்
சொல்லியபரிதிபாண்டில்சூழ்ந்திடுகடகநேமி
சில்லிமண்டலமேயாழிதிகிரிபாலிகைவிருத்தம்
வல்லைசக்கரமீரெட்டும்வட்டமென்றிட்டநாமம். (உ)

உண்டையேகுவவுகொம்மையொடுபந்தம்புஞ்சஞ்சேடு
முண்டமேசுணையேவட்டுமுத்தையேதுறுமல்சோகம்
கொண்டசேர்வுடனேமாழைகுவிதலேதொழுதிபூகம்
பிண்டமூவாறுபேருந்திரட்சியாம்பிழம்புமாமே. (ங)

தொழுதியேகுவவுதோடுதொகைசமுதாயஞ்சங்கம்
தழுவியகுழுவேகோட்டிசமவாயநிகாயங்குப்பை
குழுமலேகுவாலிராசிகுவிதன்மூவைந்துங்கூட்டம்
அழகியதகட்டிணுமமரியடரைம்மையாமே. (ச)

சிறுகொடியின்பெயர்—கத்திகை. க.
தேரிற்கட்டுங்கொடியின்பெயர்—கூவிரம். க.
துணியின்பெயர்—சிதார், சிதவல். உ.
சித்திரத்தின்பெயர்—ஓவியம், வட்டிகை. உ.
எழுதலின்பெயர்—பொறித்தல், தீட்டல், வரைதல். ௩.

மரவுரியின்பெயர்—வற்கலை, இறைஞ்சி, சீரை. ௩.
உடுத்தலின்பெயர்—சுற்றல். க.
இறுக்கலின்பெயர்—தற்றல். க.

---

# பெயர்ப்பிரிவு.

இ - ள். கடி மலர்ப் பிண்டி நீழற் காவலன் சரணம் போற்றி-மணம் பொருந்திய பூக்களையுடைய அசோகமரத்தினது நிழலின்கண்ணே வீற்றிருந்த அருகக்கடவுளுடைய திருவடிகளைத் துதித்து,—வடிவினில் - வடிவினுலும்,—அளவுதன்னில் - அளவினுலும்,—வண்ணத்தில் - வண்ணத்தினுலும்,—காட்சி ஆகும் நெடியது பொருளின் - கண்ணுக்குப் புலப்படும் பெரிதாகிய பொருளினிடத்தும்,—மற்று - அஃதன்றி,—நீள் உணர்வால் காணப்படு பொருளின் - உயர்ந்த அறிவினுற் காணப்படும் பொருளினிடத்தும் பொருந்திய,—குணப்பேர்ப் பண்பதாந் தொகுதி சொல்வாம் - பண்புகளின்பெயர்களைத் தெரிவிக்கின்ற பண்புப்பெயர்த் தொகுதியை (யாம்) கூறுவாம். எ - று. ஓர், ஏ அசை.

வட்டத்தின்பெயர்—கோளகை, சொம்மை, வலயம், தட்டு, பரிதி, பாண்டில், கடகம், நேமி, சில்லி, மண்டலம், ஆழி, திகிரி, பாலிகை, விருத்தம், வல்லை, சக்கரம். கசு.

திரட்சியின்பெயர்—உண்டை, குவவு, கொம்மை, பந்தம், புஞ்சம், சேடு, முண்டம், கணை, வட்டு, முத்தை, துறுமல், சோகம், சேர்வு, மாழை, குவிதல், தொழுதி, பூகம், பிண்டம், பிழம்பு. கக.

கூட்டத்தின்பெயர்—தொழுதி, குவவு, தோடு, தொகை, சமுதாயம், சங்கம், குழு, கோட்டி, சமவாயம், நிகாயம், குப்பை, குழுமல், குவால், இராசி, குவிதல். கரு.
தகட்டின்பெயர்—அரி, அடர், ஐம்மை. ௩.

குடிலமேகுலாவல்கோணல்கோட்டங்கூன்கோண்வளாவல்
வடிவுளதட்டுவாங்கல்வணர்பத்தம்வளைவின்பேரே
படலையேபடர்ச்சிபம்பல்பரந்திடும்வடிவினுமம்
புடைபடுகுமிழ்ப்புத்தானேபுளகமாமொக்குள்கொப்புள். (௫)

குழல்சுகிர்தூம்புநாழிகூறியபுரைவேய்வேணு
ஒழுகியசுரைநாளத்தோடொன்பதுமுட்டுளைப்பேர்
புழைகுழறுளையுடைத்தாம்பொருள்பிணர்சர்ச்சரைப்பேர்
செழுமயிர்கதிர்கள்போலச்சேர்ந்திடுந்தொகுதிகற்றை. (௬)

மதரணிபெருகலூக்கன்மற்றையவிதப்புச்சால
அதிகமேசிறப்பிறப்பேர்டலைதவவமலையான்றல்
கதழ்வொடுபிறங்கல்கூரேகழுமல்பூரிப்பேயூங்கு
புதுமையேயுருத்தன்மூவேழ்மிகுதியாம்பொங்கலும்பேர். (௭)

மன்னுமோடுக்கமோங்கல்வார்தல்சேணுழுக்கம்பொங்கல்
பன்னியசிமிர்தல்புங்கம்பரிபுரையுச்சந்துங்கம்
மின்னியநிவப்புகப்புமிசைமேடுபிறங்கலேந்தல்
உன்னதஞ்சிகரமூவேழுயர்ச்சியுத்துங்கமும்பேர். (௮)

விரிவின்பேர்விசாலமாகும்விபுலமுமாம்பரப்புப்
பரவைபப்பழுவந்தாவல்பாய்தலாஞெமிர்தலும்பேர்
மருவியபயினிசங்கமற்றிவையிரண்டுங்கூடல்
பருமைபினுமம்பீனம்பனம்பரூஉவென்றும்பேரே. (௯)

பாடுமாண்பாழிமீளிபணைபொழில்பகடுமூரி
மோடுமாறடவேவீறுமுடலைகொன்கருமையண்ணல்
ஈடுமாநளியேமானமிருமையேகயவோடேந்தல்
பீடுவான்குவவுசெம்மைபெருமைப்பேரிருபத்தேழே. (௧௰)

அணுநுழைமுளரிநுட்பமாய்தன்முள்ளயிர்நுணங்கு
நுணுகொடுநுவணைநுழைநொசிவீராநிவைநுண்மைப்பேர்
கணமிறைவறிதுசின்னங்கன்றுசுதன்னமொட்டே
அணைதருகிலமேதோகமற்பமிட்டிடையுமாமே. (௧௧)

அகறல்கண்ணறையேபாழியாய்வொடுபடர்தலான்றல்
அகலுளேவியலிடங்களகலமிவ்வெட்டுமாகும்
திகழ்செம்மையிருசுசெப்பஞ்செவ்வனேர்செவ்வையைந்தாம்
நிகழுஞ்சேண்சேய்மைதூரநீளிடைதானுமப்பேர். (௧௨)

# லகரவெதுகை.

புலவர்பாடுநரேகூத்தர்புதனும்பர்கவிகளோவர்
வலவனேவெற்றியாளன்மருவுந்தேர்ப்பாகன்மாயோன்
அலகுநெற்கதிரேயாதிபலகறைநுளம்பெண்ணேதி
அலரிகண்வரியருக்கனழகொருமரம்பூவாமே. (௧)

ஆலமேவடவிருக்கமடுநஞ்சோடலர்பூநீராம்
மூலம்வேர்முதலேயேதுமுதிர்வுறுகிழங்கோர்நாளாம்
சீரமேருணந்தண்டித்தறிகழ்சரித்திரமுப்பேரே
சாலமேவலைசாலேகமராமரஞ்சபைமதிற்பேர். (௨)

காலம்வைகறைகாலப்பேர்கலமலம்யாழ்பூணுவாய்
சாலகங்காலதர்ப்பேர்தானேபூமொட்டுமாகும்
தாலமுண்கலமேநாவேதராதலம்பனையேநாற்பேர்
ஆலலாடுதலொலிப்பேரறுவைசித்திரைநாளாடை. (௩)

இலம்பகமத்தியாயநுதற்சூட்டென்றிருபேராமே
இலஞ்சிமாவாவிகொப்பூழெயில்குணமகிழேயேரி
பலங்கனிபயன்காய்சேனைபலங்கிழங்கறுபேராகும்
அலங்கலென்பதுபூமாலையசைவொடுதளிரிலங்கல். (௪)

ஒலியென்பதிடியேகாற்றேயோசையென்றாகுமுப்பேர்
ஒலியலேயாறுந்தோலுமுடுத்தவாடையும்பைந்தாரும்
கலுழியேகான்யாறென்பகலங்கியநீருமாமே
கலைமதிப்பங்குதூசுகல்விநூலிரலைகாஞ்சி. (௫)

பீலியேயாலவட்டம்பெருவரைகலாபிதோலகை
பாலிகையுதடுவட்டம்படைவாளின்முட்டியும்பேர்
வேலியூர்மதில்காவற்பேர்மெத்தைமெல்லணையேசட்டை
தோலிபம்வனப்புவார்த்தைதருத்திதோற்பலகையைம்பேர். (௬)

பாலையோர்மரநிலம்மந்நிலத்தினிற்பாடலும்பேர்
வேலையேகடலதற்குமேவியகரையேகாலம்
மாலையேயிரவோடந்திமாலிகையொழுங்குநாற்பேர்
சாலையேகுதிரைப்பந்தியறப்புறந்தானுமாமே. (௭)

அல்லிவெள்ளாம்பல்காயாவகவிதழாகமுப்பேர்
அல்லிராவிருளேயென்பவாகமார்புடலுமாமே
சில்லியேவட்டங்கீரைதேருருள்சிள்வீடென்ப
வல்லியாய்ப்பாடிவள்ளிவரைவொடுநிகளமாமே. (௮)

# லகரவெதுகை.

புலவரென்பது-பாடுவோர், கூத்தர், புதன், தேவர், பண்டிதர், கம்மாளர். ௬. வலவன்—வெற்றியாளன், தேர்ப்பாகன், திருமால். ௩.
அலகு—நெற்கதிர்முதலியன, பலகறை, நுளம்பு, இலக்கம், ஆயுதம்.
அலரி—கண்வரி, சூரியன், அழகு, ஒருமரம், பூ. ௫.

ஆலம்—ஆலமரம், நஞ்சு, மலர்ந்தபூ, நீர். ௪.
மூலம்—வேர், முதல், காரணம், கிழங்கு, ஒருநக்ஷத்திரம். ௫.
சீலம்—குணம், தண்டித்தல், சரித்திரம். ௩.
சாலம்—வலை, பலகணி, ஆச்சாமரம், கூட்டம், மதில். ௫.

காலம்—விடியற்காலம், பொழுது. ௨.
கலம்—கலப்பை, யாழ், ஆபரணம், மரக்கலம். ௪.
சாலகம்—பலகணி, பூவரும்பு. ௨. தாலம்-உண்கலம், நா, பூமி, பனை.
ஆலல்—ஆடுதல், ஒலி. ௨. அறுவை-சித்திரைநக்ஷத்திரம், வஸ்திரம்.

இலம்பகம்—அத்தியாயம், நுதலணிமாலை. ௨.
இலஞ்சி—மாமரம், வாவி, கொப்பூழ், மதில், குணம், மகிழமரம், ஏரி.
பலம்—பழம், பயன், காய், சேனை, வலிமை, கிழங்கு. ௬.
அலங்கம்—பூமாலை, அசைதல், தளிர், ஒளிசெய்தல். ௪.

ஒலி—இடி, காற்று, ஓசை. ௩.
ஒலியல்—நதி, தோல், வஸ்திரம், பூமாலை. ௪.
சலுழி—கான்யாறு, கலங்கனீர். ௨.
கலை—மதியின்பங்கு, சீலை, கல்வி, நூல், கலைமான், மேகலை. ௬.

பீலி—சிற்றுலவட்டம், மலை, மயில், மயிற்றோகை. ௪.
பாலிகை—உதடு, வட்டம், படைவாளின்முட்டி. ௩. வேலி—ஊர், மதில், காவல். ௩. மெத்தை—அமளி, சட்டை. ௨. தோல்—யானை, * எண்வகைவனப்பிலொன்று, சொல், துருத்தி, தோற்பலகை. ௫.

பாலை—ஒருமரம், ஒருநிலம், பாலைநிலப்பாடல். ௩.
வேலை—கடல், கடற்கரை, காலம். ௩.
மாலை—இரா, அந்திப்பொழுது, மாலை, ஒழுங்கு. ௪.
சாலை—குதிரைப்பந்தி, அறச்சாலை. ௨.

அல்லி—வெள்ளாம்பல், காயாமரம், அகவிதழ். ௩.
அல்—இரா, இருள். ௨. ஆகம்—மார்பு, உடம்பு. ௨.
சில்லி—வட்டம், சிறுகீரை, தேருருள், சிள்வீடு. ௪.
வல்லி—இடைச்சேரி, படர்கொடி, அளவு, கால்விலங்கு. ௪.

---

*எண்வகைவனப்பு: "அம்மையழகுதொன்மைதோல்விருந்-தியைபு புலனிழை பெனவனப் பெட்டே." என்னுஞ் சூத்திரத்தாலறிக.

இல்லில்லாளில்லையென்றலிராசிசாவிடம்வீடாறே
மல்வளம்வலியினோடுமாயவனுடன்முப்பேர்
சில்லையென்பதுபிரண்டைசிள்வீடுதூர்த்தைக்கும்பேர்
ஒல்லையேவிரைவுதொல்லைகடுப்புடன்சிறுபோதாமே. (௯)

வில்லென்பமூலநாளாம்வெஞ்சிலையொளியுமப்பேர்
வல்வலிவிரைவுசூதாமலர்தலையெதிர்தலென்றல்
புல்புலிபுணர்ச்சிபுன்மைபுதல்பனையனுடநாளாம்
கொல்லென்பதசைச்சொலையங்கொலையேவல்வருத்தநாற்பேர். ()

மால்புதன்பெருமைமேகமாயவன்மயக்கங்காற்றே
ஆலோடலிரண்டுசொல்லுமாமென்பதல்லவும்பேர்
வால்வெண்மைமிகுதிதூய்தாம்வசந்தனேதென்றல்காமன்
சால்புமாட்சிமைசான்றாண்மைசாற்றியவிருபேர்தானே. (௧௧)

வலம்புரிசங்குநந்தியாவர்த்தமோர்மரமுப்பேரே
புலம்பொலிதனிமையச்சம்பொய்யென்பபொக்கம்பொந்தாம்
சிலம்பொலினெகிழிகுன்றஞ்செருந்திபஞ்சரம்வாட்கோரை
விலங்குகாற்றளைகுறுக்குமிருகத்தின்பொதுவுமாமே. (௧௨)

உலகமேதிசைவெண்பூமியுயர்குணஞ்சனமுயர்ந்தோர்
அலவனேஞெண்டுநூளையம்புலிகடகராசி
இலயமேகூத்துங்கூத்தின்விகற்பமுமிருபேரென்ப
வலைவஞ்சப்பெண்வல்லோன்வருடைதான்சிம்புளாடாம். (௧௩)

கலாபமேமணிவடம்மேகலைமயிலிறகுமுப்பேர்
சிலீமுகமுலைக்கண்வண்டுசித்திரபுங்கந்தானும்
சலாகைநன்மணிநாராசஞ்சவளமுமாகுமென்ப
விலோதம்பெண்மயிர்பதாகைவிடமென்பநஞ்சுந்தேளும். (௧௪)

செல்விடியேவன்மேகஞ்சிதலையுமாகுமென்ப
எல்லொளிபகலிகழ்ச்சியிரவுடனிரவியைம்பேர்
சொல்லுரைகீர்த்திநெல்லாந்தொடுத்தலேவளைத்தல்கட்டல்
கல்லொலிமலைகல்லென்பகரண்டநீர்க்காக்கைசெப்பாம். (௧௫)

கலிவஞ்சமொலியேவாரிகடையுகம்வலியைம்பேரே
சிலையொலிமலைகல்வில்லாஞ்செடியொளிசெறிவுதீதாம்
தலமென்பதிலைபுவிப்பேர்தலையிடந்தலைவிண்ணுதி
திலமேமஞ்சாடியெள்ளாந்திலகமஞ்சாடிபொட்டாம். (௧௬)

இல்லென்பது—மனைவி, இல்லையெனல், இராசி, சா, இடம், வீடு.
மல்—வளம், வலிமை, திருமால்கூத்து. ௩.
சில்லை—பிரண்டை, சிள்வண்டு, தூர்த்தை. ௩.
ஒல்லை—காலவிரைவு, பழமை, வேகம், சிறுபொழுது. ௪.

வில்—மூலநக்ஷத்திரம், வில், ஒளி. ௩. வல்—வலிமை, சீக்கிரம், சூதாடுகருவி. ௩. மலர்தல்—எதிர்தல், தோன்றல். ௨.
புல்—புலி, கலவி, அற்பம், புல், பனை, அனுடநக்ஷத்திரம். ௬.
கொல்—அசைச்சொல், ஐயம், கொல்லெனேவல், வருத்தம். ௪.

மால்—புதன், பெருமை, மேகம், திருமால், மயக்கம், காற்று. ௬.
ஆல்—ஆமெனல். ௧. அல்—அல்லவெனல். ௧.
வால்—வெண்மை, மிகுதி, சுத்தம். ௩. வசந்தன்—தென்றல், மன்மதன். ௨. சால்பு—மாட்சிமை, சால்புடைமை. ௨.

வலம்புரி—சங்கு, நந்தியாவர்த்தம், ஒருமரம். ௩. புலம்பு—ஒலி, தனிமை, பயம். ௩. பொய்—அசத்தியம், மரப்பொந்து. ௨. சிலம்பு—ஒலி, சிலம்பு, மலை. ௩. செருந்தி—செருந்திமரம், வாட்கோரை. ௨.
விலங்கு—கால்விலங்கு, குறுக்கு, மிருகத்தின்பொது. ௩.

உலகம்—திக்கு, ஆகாயம், பூமி, உயர்குணம், சனம், உயர்ந்தோர். ௬.
அலவன்—நண்டு, பூனை, சந்திரன், கடகராசி. ௪.
இலயம்—கூத்து, கூத்தின்வேறுபாடு. ௨. வல்லவை—காளியேவற்பெண், வல்லவன். ௨. வருடை—எண்காற்புள், ஆடு. ௨.

கலாபம்—மணிவடம், பதினாறுகோவைமணி, மயிலிறகு. ௩.
சிலீமுகம்—முலைக்கண், வண்டு, அம்பு. ௩.
சலாகை—தெய்வவகன்மணி, சலாகை, சவளம். ௩.
விலோதம்—கூந்தல், பெருங்கொடி. ௨. விடம்—நஞ்சு, *தேள். ௨.

செல்—இடி, செல்லெனேவல், மேகம், கறையான். ௪.
எல்—பிரகாசம், பகல், இகழ்ச்சி, இரா, சூரியன். ௫.
சொல்—வார்த்தை, புகழ், நெல். ௩. தொடுத்தல்-வளைத்தல், கட்டல்.
கல்—ஒலிக்குறிப்பு, மலை, கல். ௩. கரண்டம்—†நீர்க்காக்கை, செப்பு.

கலி—வஞ்சனை, ஒலி, கடல், கடையுகம், வலிமை. ௫.
சிலை—ஒலி, மலை, கல், வில். ௪. செடி—பிரகாசம், நெருக்கம், தீமை.
தலம்—இலை, பூமி. ௨. தலை—இடம், சிரசு, ஆகாயம், முதல். ௪.
திலம்—மஞ்சாடிமரம், எள்ளு. ௨. திலகம்—மஞ்சாடிமரம், பொட்டு.

* நளிவிடம் - தேள். † காரண்டம் - நீர்க்காக்கை.

வல்லைகான்விரைவுமைந்தாம்வடமணிவடமாரும்பு
பல்லமோர்கணக்குப்பாணம்பல்லணங்கரடிநாற்பேர்
மல்லலேவலிவளப்பேர்வாயிலைம்புலன்கடைப்பேர்
முல்லைமல்லிகையேவென்றிமுல்லைநன்னிலங்கற்பாமே. (௧௭)

கோலென்பதீட்டிவாட்கோறுகிலிகைதுலாஞ்சம்மட்டி
சீலமன்னவன்றன்செங்கோறிரட்சியாழ்நரம்போடம்பு
நீலவஞ்சனக்கோலோடுநீளிலந்தையும்பன்னோர்பேர்
காலியருணன்பாம்புகாற்றொடுமுப்பேராமே. (௧௮)

கூலமேபண்ணிகாரம்புனற்கரைகோவிலங்கின்
வாலோடாவணமேபாகல்வரம்பொடுகுரங்கெண்பேரே
காலிடமரக்கால்பிள்ளைக்குறுந்தறிவனங்காம்பூற்றம்
காலனங்குரங்கால்வாய்க்கால்காற்றுத்தேருருள்பன்மூன்றே. ()

கோலமேயழகுபன்றிபாக்குநீர்க்கொழுந்துபீர்க்காம்
மாலியேயிரவிகள்ளாமாந்தலேமரித்தலுண்டல்
வேலயில்படைக்கலப்பேர்வேதண்டங்கைலைவெற்பாம்
சாலிநெற்பொதுவுங்கள்ளுமருந்ததிதானுமாமே. (௨௦)

உலவைகான்மரத்தின்கொம்போடுறுதழைவிலங்கின்கோடாம்
மலைதலைபொரல்சூடற்பேர்மந்திரிகுபேரன்வெள்ளி
யலர்பழிவிரிபூநீராமவிர்தலையொளிபீறற்பேர்
எலிபூரநாளெலிப்பேரிரணம்பொன்கடன்மாணிக்கம். (௨௧)

ஆலயநகரங்கோயிலானையின்கூடமுப்பேர்
பாலமேமழுநெற்றிப்பேர்பவித்திரஞ்சுசிதருப்பை
நூலோர்மந்திரிகள்பார்ப்பார்நுவல்கவிப்புலவர்க்கும்பேர்
வேலாவலயந்தான்பூமிவிரிகடலிருபேராமே. (௨௨)

சூலியேகருப்பப்பெண்ணுர்துர்க்கையுஞ்சிவனுமுப்பேர்
வாலியேயலாயுதன்கிட்கிந்தையின்மன்னன்பேராம்
பால்புடையியல்புதிக்குப்பகுத்தல்பாலென்னுமைம்பேர்
ஏலமேமயிர்ச்சாந்தோடேயேலத்தின்பேருமாமே. (௨௩)

லகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௨௨௯.

—○○◦○○—

வல்லையென்பது-பெருங்காடு,காலவிரைவு,வலிமை.ங.வடம்-மணி
வடம், ஆல்மரம், கயிறு. ங.
பல்லம்—ஒரெண், அம்பு, குதிரைக்கலணை, கரடி. ச.
மல்லல்—வலிமை, வளம். உ. வாயில்—ஐம்புலன், வாயில். உ.
முல்லை—வனமல்லிகை, வெற்றி, முல்லைநிலம், கற்பு. ச.

கோல்—ஈட்டி, விட்டேறு, எழுதுகோல், துலாம், குதிரைச்சம
மட்டி, செங்கோல், திரட்சி, யாழினரம்பு, பாணம், அஞ்சனக்
கோல், இலந்தை. கக.
காலிலி—சூரியன்றேர்ப்பாகன், பாம்பு, காற்று. ங.

கூலம்—பலபண்டம், நீர்க்கரை, பசு, விலங்கின்வால், கடைவீதி,
பாகல், வரம்பு, குரங்கு. அ.
கால்—இடம், மரக்கால், புத்திரன், குறுந்தறி, காடு, காம்பு, ஊன்
றுகோல், காலன், முளை, பாதம், வாய்க்கால், காற்று, தேருருள்.

கோலம்—அழகு, பன்றி, பாக்கு, நீரோட்டம், பீர்க்கு. ரு.
மாலி—சூரியன், கள். உ. மாந்தல்—சாதல், உண்டல். உ.
வேல்—வேலாயுதம்,ஆயுதப்பொது.உ.வேதண்டம்—வெள்ளிமலை,
மலை. உ. சாலி—நெற்பொது, கள், அருந்ததி. ங.

உலவை—காற்று, மரக்கொம்பு, தழை, விலங்கின்கொம்பு. ச.
மலைதல்—பொருதல்,அணிதல்.உ.மந்திரி—குபேரன், சுக்கிரன்.உ.
அலர்--பழிமொழி,மலர்ந்தபூ,* நீர்.ங.அவிர்தல்-ஒளிசெய்தல்,பிறல்.
எலி—பூரநக்ஷத்திரம்,எலி.உ.இரணம்-பொன், கடன், மாணிக்கம்.

ஆலயம்—நகரம், தேவர்கோயில், யானைக்கூடம். ங.
பாலம்—மழுப்படை, நெற்றி. உ.
பவித்திரம்—தூய்மை, தருப்பை. உ. நூலோர்—மந்திரிகள்,
பிராமணர், புலவர். ங. வேலாவலயம்—பூமி, கடல். உ.

சூலி—கருப்பவதி, துர்க்கை, சிவன். ங.
வாலி—பலதேவன், கிட்கிந்தைமன்னன். உ.
பால்—பக்கம், குணம், திசை, பங்கு, பால். ரு.
ஏலம்—மயிர்ச்சாந்து, ஏலம். உ.

—೦೦:೦೦—

* மழையல்ர் - நீர்.

# வகரவெதுகை.

நவமென்பபுதுமைகேண்மையொன்பதுநற்கார்காலம்
கவனமேகலக்கம்வெம்மைகுதிரையின்கதிபோர்காடாம்
உவணமேகலுழனுமுயர்ச்சிக்குங்கழுகுக்கும்பேர்
பவனமேயிராசிபூமிபடர்காற்றுமனையேகோயில். (௧)

புவனநீர்புவியுமாகும்புரத்தலேகாத்தல்வண்மை
நுவணைநூலுண்மைபிண்டிநூலேசாத்திரமுந்தர்க்கம்
தவவென்பமிகுதிகுன்றறந்தேநூல்சாத்திரப்பேர்
சிவநன்மைகுறுணிமுத்தேசீவனேயுயிர்வியாழன். (௨)

இவறலேமறவியாசையென்பபேரிச்சைக்கும்பேர்
இவர்தலேயெழுச்சியாசையேறுதல்சேறன்மேவல்
சுவவென்பபுள்ளின்மூக்குஞ்சுவர்க்கமுஞ்சுண்டனும்பேர்
குவவென்பதிரட்சிமற்றுங்குவிதலேபெருமைக்கும்பேர். (௩)

தவிசென்பதடுக்குமெத்தையிலகடமும்பேர்தானே
சவிமணிக்கோவைசெவ்வைசாற்றியவனப்புக்காந்தி
நவிர்மேமஞ்ஞைபுன்மைநன்மலையுடனேயுச்சி
நவிலல்சொல்லுதல்பண்ணற்பேர்நவியமேமழுக்கோடாலி. (௪)

கவுசிகம்விளக்குத்தண்டோர்பண்பட்டுக்கடியகோட்டான்
சவுரியேதிருமால்கள்வன்சனியமனிணையநாற்பேர்
மவுலியேமுடிகோடீரம்வட்கலென்பதுநாண்கேடாம்
கவலைசெந்தினையோர்வல்லிகவர்வழிதுன்பநாற்பேர். (௫)

சேவகம்வீரம்யானைதுயிலிடந்துயிலுஞ்செப்பும்
சீவனியோர்மருந்துசெவ்வழித்திறத்தோரோசை
ஆவணம்புனர்தம்வீதியங்காடியுரிமைநாற்பேர்
நீவியேதுடைத்தலாடைநெருங்குகொய்சகமுப்பேரே. (௬)

உவளகமதிலோர்பக்கமூருணிபள்ளமுள்ளில்
கவடென்பகப்பியானைக்கழுத்திடுபுரசைக்கும்பேர்
சிவையுமைமரவேர்கொல்லனுலைமுகந்திரியுமோரி
கவையேயாயிலியங்காடுகவர்வழியெள்ளிளங்காய். (௭)

சிவப்பென்பசினமுஞ்செம்மையுடன்சினக்குறிப்புமுப்பேர்
உவப்பென்பமகிழ்ச்சிமேடாமொழுக்கமேவழியாசாரம்
தெவிட்டலேயடைத்தல்கான்றனிறைதலுமொலியுஞ்செப்பும்
துவக்கேதோல்பிணக்கிரண்டாஞ்சூழலேயிடம்விசாரம். (௮)

# வகரவெதுகை.

நவமென்பது—புதுமை, நட்பு, ஒன்பது, கார்காலம். ௪.
கவனம்—கலக்கம், வெப்பம், குதிரையின்வேகம், போர், காடு. ரு.
உவணம்—கருடன், உயர்ச்சி, கழுகு. ௩.
பவனம்—இராசி, பூமி, காற்று, வீடு, அரசரில். ரு.

புவனம்—நீர், பூமி. உ. புரத்தல்—காத்தல், கொடுத்தல். உ.
நுவணை—கல்விநூல், நுட்பம், மா. ௩. நூல்—சாத்திரம், பஞ்சிநூல்.
தவ—மிகுதி, குறைதல். உ. தந்து—பஞ்சிநூல், சாத்திரம். உ.
சிவம்—நன்மை, குறுணி, மோட்சம். ௩. சீவன்—உயிர், வியாழன்.

இவறல்—மறதி, ஆசை, வேட்கைப்பெருக்கம். ௩.
இவர்தல்—எழுச்சி, ஆசை, வறுதல், செல்லுதல், சேருதல். ரு.
சுவவு—பறவைமூக்கு, சுவர்க்கம், மூஞ்சூறு. ௩.
குவவு—திரட்சி, குவிதல், பெருமை. ௩.

தவிசு—தடுக்கு, மெத்தை, யானைமேற்றவிசு. ௪.
சவி—மணிக்கோவை, செவ்வை, அழகு, ஒளி. ௪.
நவிரம்—மயில், புன்மை, மலை, உச்சி. ௪.
நவிலல்—சொல்லல், செய்தல். உ. நவியம்—மழுப்படை, கோடாலி.

கவுசிகம்—விளக்குத்தண்டு, ஒருபண், பட்டுச்சீலை, கோட்டான். ௪.
சவுரி—திருமால், கள்வன், சனி, யமன். ௪.
மவுலி—முடி, சடை. உ. வட்கல்—நாணம், கெடுதல். உ.
கவலை—கம்பு, [செந்தினை] ஒருகொடி, கவர்வழி, துன்பம். ௪.

சேவகம்—வீரம், யானைதுயிலிடம், நித்திரை. ௩.
சீவனி—மிருதசஞ்சீவனி, செவ்வழித்திறத்திறேசை. உ.
ஆவணம்—புனர்பூசநக்ஷத்திரம், தெரு, கடைவீதி, உரிமை. ௪.
நீவி—துடைத்தல், வஸ்திரம், கொய்சகம். ௩.

உவளகம்—மதில், ஒருபக்கம், குளம், பள்ளம், அந்தப்புரம். ரு.
கவடு—மரக்கொம்பு, யானைக்கழுத்திடுகயிறு. உ.
சிவை—பார்ப்பதி, மரவேர், கொல்லனுலைமூக்கு, நரி. ௪.
கவை—*ஆயிலியநக்ஷத்திரம், காடு, கவர்வழி, எள்ளிளங்காய். ௪.

சிவப்பு—கோபம், சிவப்பு, கோபக்குறிப்பு. ௩.
†உவப்பு—களிப்பு, மேடு. உ. ஒழுக்கம்—வழி, ஒழுக்கம். உ.
தெவிட்டல்—அடைத்தல், உமிழ்தல், நிறைதல், ஒலித்தல். ௪.
துவக்கு—தோல், பிணக்கு. உ. குழல்—இடம், ஆராய்தல். உ.

* கௌவை - ஆயிலியநக்ஷத்திரம். † உகப்பு - உயர்ச்சி.

சேவலேகாவலோடுசேறுபுள்ளாண்முப்பேரே
கேவலந்தனிமைமுத்திகிரமென்பதுபால்கிள்ளை
பூவைசாரிகைகாயாவாம்புலிசிங்கமுழுவைசாந்தே
வாவலஞ்சலிகைப்புள்ளுந்தாவலும்வருக்கலாமே. (௯)

சுவல்பிடர்தோண்மேன்மேடுதுரகதக்குசைநாற்பேரே
கவிமந்திபுலவன்சுங்கன்கழியென்பமிகுதிகாயல்
நவிருளைமருதயாழ்வாணுஞ்சிலெந்திரங்கலப்பை
கவிகையேகுடைகொடைப்பேர்கடிப்பங்காதணிபூண்செப்பாம்.()

மாவண்டுபெருமைபிண்டிவாசிகூப்பிடல்வெறுத்தல்
காவுறுவிலங்குசெல்வங்கருநிறங்கமலைபத்தாம்
கோவிழிபசுநீர்திக்குக்குலிசம்விண்கிரணம்பூமி
ஏவுரைசுவர்க்கம்வேந்தனிரங்கல்வெற்பீரேழாமே. (௧௧)

ஆவியேவாவிநாற்றமாருயிர்புகைமூச்சைம்பேர்
கூவிரந்தேர்தேர்மொட்டாங்குவடுநீண்மலைவெற்புச்சி
காவியேகுவளைகாவிக்கல்லொடுகள்ளுமுப்பேர்
நாவிதன்மஞ்சிகன்கார்த்திகைபூராநாளுமாமே. (௧௨)

ஆவென்பதிரக்கம்பெற்றமாச்சாவோடிசைவியப்பாம்
காவென்பதுலாம்பூஞ்சோலைகாத்தலோட்சுமைநாற்பேரே
பாவென்பபனுவனூற்பாபரவுதல்பரப்புமாகும்
தாவென்பபகைவருத்தந்தாண்டுதல்வலிகேடைம்பேர் (௧௩)

கவ்வையேபழிச்சொறுன்பங்கள்ளொலியெள்ளிளங்காய்
பவ்வமேகுமிழிவாரிபருமரக்கணுவுவாவாம்
தவ்வைமுன்பிறந்தாளோடுதாயுமூதேவியும்பேர்
நவ்வியேதோணிமானுநன்றென்பபெருமைநன்மை. (௧௪)

அவலேசிற்றுண்டிபள்ளநீர்நிலையாகுமுப்பேர்
செவிலியேவளர்த்தகைத்தாய்முன்பிறந்தவளுஞ்செப்பும்
கவுடமோர்கொடியோர்தேசமிருபெயர்கழறலாமே
சுவடுவச்சிராங்கியோரெண்சுபமென்பதழகுவெண்மை. (௧௫)

பவமென்பசனனம்பாவம்பாவந்தான்வினைதியானம்
சவுரியங்களவுவீரந்தண்மைதான்குளிர்ச்சிதாழ்வு
யவமொருதானியப்பேரென்பநெல்லிற்குமப்பேர்
யவனர்சோனகர்கண்ணாளர்சித்திரகாரரென்ப. (௧௬)

சேவலென்பது—காவல், சேறு, மயிலுமெழாலுமொழிந்தபறவை யாண். ௩. கேவலம்—தனிமை,மோட்சம்.௨.கீரம்—பால்,கிளி.
பூவை—நாகணவாய்ப்புள்,காயா.௨. புலி—சிங்கவிராசி,புலி,நால்வகைச்சாந்திலொன்று. ௩. வாவல்—வௌவால், கடத்தல். ௨.

சுவல்—பிடர், தோண்மேல், மேடு, குதிரைமயிர். ௪.
கவி—குரங்கு, புலவன், சுக்கிரன். ௩. கழி—மிகுதி, காயல். ௨.
நவிர்—ஆண்மயிர், மருதயாழ்த்திறம், வாள். ௩.
நாஞ்சில்—மதிலுறுப்பு, கலப்பை.௨.கவிகை—குடை,கொடை.௨.
கடிப்பம்—காதணி, ஆபரணச்செப்பு. ௨.

மா—வண்டு, பெருமை, மா, குதிரை, அழைத்தல், வெறுப்பு, விலங்கின்பொது, செல்வம், கருநிறம், திருமகள். ௧௦.
கோ—கண், பசு, நீர், திசை, வச்சிராயுதம், ஆகாயம், கிரணம்,பூமி, அம்பு, சொல், தேவலோகம், அரசன், இரங்கல், மலை. ௧௪.

ஆவி—குளம், வாசனை, உயிர், புகை, உயிர்ப்பு. ௫.
கூவிரம்—தேர், தேர்க்கொடிஞ்சி.௨.குவடு—மலை,மலையினுச்சி.௨.
காவி—கருங்குவளை, காவிக்கல், கள். ௩.
நாவிதன்-மயிர்களைவோன்,கார்த்திகைநக்ஷத்திரம்,பூரநக்ஷத்திரம்.

ஆ—இரக்கம், பசு, ஆச்சாமரம், இசை, அதிசயம். ௫.
கா—துலை, சோலை, காத்தல், தோட்சுமை. ௪.
பா—பஞ்சிநூல், நூற்பா, பரவுதல், பரப்பு. ௪.
தா—பகை, துன்பம், தாண்டுதல், வலிமை, கேடு. ௫.

கவ்வை—பழிச்சொல், வருத்தம், கள், ஒலி, எள்ளிளங்காய். ௫.
பவ்வம்—நீர்க்குமிழி, கடல், மரக்கணு, பௌர்ணிமை. ௪.
தவ்வை—தமக்கை, தாய், மூதேவி. ௩.
நவ்வி—தோணி, மான். ௨. நன்று—பெருமை, நன்மை. ௨.

அவல்—ஒருசிற்றுண்டி, பள்ளம், குளம். ௩.
செவிலி—வளர்த்ததாய், முன்பிறந்தாள். ௨. கவுடம்—ஒருகொடி, ஒருதேசம். ௨.
சுவடு—வச்சிராங்கி,ஒருநெல்லிலக்கம்.௨.சுபம்--அழகு,வெண்மை.

பவம்—பிறப்பு, பாவம். ௨. பாவம்—தீவினை, தியானம். ௨.
சவுரியம்—களவு, வீரம். ௨. தண்மை—குளிர்ச்சி, தாழ்வு. ௨.
யவம்—ஒருவகைத்தானியம், நெல். ௨.
யவனர்—சோனகர், கம்மாளர், சித்திரகாரர். ௩.

ஆவரணந்தான்சட்டைதடைமறைப்பரணமாடை
ஏவலேவியங்கோளென்பவெய்தியவறுமைக்கும்பேர்
ஓவியர்சிற்பநூலோரோடுசித்திரகாரரும்பேர்
ஓவிரக்கச்சொனீக்கமோடுநீர்தகைகபாடம். (கஎ)

அவ்வையேதாயின்பேருமௌவையோடிருபேராமே
செவ்வியேர்பொழுதினோடுசெப்பியபருவமாகும்
தெவ்வமர்பகையிரண்டாந்தீவினைகொடுமைபாவம்
சைவமோர்புராணமீசன்சமயத்தின்விகற்புமாமே. (கஅ)

வகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - உசஎ.

## ழகரவெதுகை.

விழவென்பமிதுனராசிவிளங்குமுற்சவமுமாகும்
கழையென்பபுனர்தமூங்கில்கரும்பெனவிரும்புமுப்பேர்
கழல்கழங்கொடுசெருப்புக்காலணிகாலிந்நாற்பேர்
கிழமைமூப்புரிமைபண்பாங்கிழிநிதிப்பொதிகீறுமே. (க)

சூழியேசுனையும்வெய்யதும்பியின்முகபடாமும்
பாழியேவலிவிலங்கின்படுக்கையூர்பற்றிலாருர்
நாழியேயளக்குநாழிநாழிகைபூரட்டாதி
ஆழிமோதிரமேநேமியலைகடல்கரையேவட்டம். (உ)

இழுமெனலோசையென்பவினிமையுமியம்புமப்பேர்
விழுமமேசிறப்புச்சீர்மையிடும்பையும்விதித்தபேரே
தொழுவென்பதுழலைதானேயிரேவதிநாளுஞ்சொல்லும்
செழுமையேவளங்கொழுப்பாந்தேனென்பாறவும்வண்டும். (௩)

கழுதுபேய்பரண்வண்டென்பகயவுகீழ்பெருமைமென்மை
அழுவமேபரப்புநாடுமழுங்கலேயிரங்கல்கேடாம்
கழுமல்பற்றொடுமயக்கங்காதலேயாசைகோறல்
கழிதலென்பதுவேசாதல்கடந்திடன்மிகுதிமுப்பேர். (ச)

மாழைபொன்னுலோகக்கட்டிமடமையோர்புளிமாவோலை
கூழையேசிறகுமாதர்கூந்தல்வெம்படையுறுப்பாம்
தாழைகேதகைதெங்காகுஞ்சாகினிசேம்புகீரை
ஊழ்முறைவெயில்பகைப்பேரூசியேசூசியாணி. (௫)

ஆவரணமென்பது—சட்டை, தடுத்தல், மறைப்பு, கோட்டை, வஸ்திரம். ரு. ஏவல்—வியங்கோள், தரித்திரம். உ.
ஓவியர்—சிற்பாசாரியர், சித்திரகாரர். உ.
ஓ—இரக்கச்சொல், நீங்குதல், மடையடைக்குங்கதவு. ௩.

அவ்வை—தாய், ஔவையார். உ.
செவ்வி—அழகு, காலம், பருவம். ௩.
தெவ்—போர், பகை. உ. தீவினை—கொடுமை, பாவம். உ.
சைவம்—ஒருபுராணம், உட்சமயங்களாறனுளொன்று. உ.

# ழகரவெதுகை.

விழவென்பது—மிதுனராசி, திருவிழா. உ.
கழை—புனர்பூசநக்ஷத்திரம், மூங்கில், கரும்பு. ௩.
கழல்—கழற்காய், செருப்பு, காலணி, கால். ௪.
கிழமை—முதுமை, உரிமை, குணம். ௩. கிழி—கிழிப்பொதி, கீறு. உ.

குழி—சுனை, யானைமுகபடாம். உ.
பாழி—வலிமை, விலங்கின்படுக்கை, ஊர், பகைவரூர். ௪.
நாழி—அளக்குநாழி, நாழிகை, பூரட்டாதிநக்ஷத்திரம். ௩.
ஆழி—மோதிரம், சக்கராயுதம், கடல், கடற்கரை, வட்டம். ரு.

இழுமெனல்—அநுகரணவோசை, இனிமை. உ.
விழுமம்—சிறப்பு, சீர்மை, துன்பம். ௩.
தொழு—தொழுமரம், இரேவதிநக்ஷத்திரம். உ.
செழுமை—வளம், [மாட்சிமை] கொழுப்பு. உ. தேன்—கள், வண்டு.

கழுது—பேய், பரண், வண்டு. ௩. கயவு-கீழ்மை, பெருமை, மென்மை.
அழுவம்—பரப்பு, நாடு. உ. அழுங்கல்—இரங்கல், கேடு. உ.
கழுமல்—பற்றுதல், மயக்கம். உ. காதல்—ஆசை, கொல்லுதல். உ.
கழிதல்—சாதல், கடத்தல், மிகுதி. ௩.

மாழை—பொன், உலோகக்கட்டி, அறிவின்மை, அழகு, புளிமா, ஓலை.
கூழை—சிறகு, பெண்மயிர், படையுறுப்பு. ௩.
தாழை—தாழை, தென்னமரம். உ. சாகினி—சேம்பு, சிறுகீரை. உ.
ஊழ்—முறை, வெய்யில், புகை. ௩. ஊசி—குசி, எழுத்தாணி. உ.

உழையென்பதிடமான்யாழினோர்நரம்பிற்கும்பேராம்
குழையென்பதளிர்துவாரங்குண்டலஞ்சேறுநாற்பேர்
விழைவென்புணர்ச்சிகாதல்வெறுக்கையென்பதுபொன்செல்வம்
வழிமரபிடம்பின்மார்க்கம்வழங்கலேகொடைபுலாவல். (௬)

ஈழம்பொன்கள்ளோர்தேசமெல்லையேயளவைவெய்யோன்
மேழகங்கவசமாடாம்வேளாண்மைகொடையேமெய்ம்மை
காழியர்வண்ணாருப்புவாணிகரிருபேர்காட்டும்
வேழமேகரும்பியானைகொறுக்கைச்சிவேணுநாற்பேர். (௭)

கூழென்பதுணவும்பொன்னும்பயிரென்றுங்கூறுமுப்பேர்
காழென்பமணியின்கோவைகற்பரல்சேகுவித்தாம்
யாழென்பமிதுனம்வீணையிரலைநாளாதிரைப்பேர்
கீழென்பதிடங்கீழ்சாதிகீழ்த்திசைகயமைநாற்பேர். (௮)

கோழியேகுருகோரூராங்குய்யமேமறைவுயோனி
மூழியேவாவிசோரூடகப்பையுமொழியுமுப்பேர்
மூழையேயகைப்பைசோறுமுறஞ்சுளகொடுவிசாகம்
றாழிலேகோறல்யானைநுண்கொடிகொடிக்கொத்தான்பேர். (௯)

தொழுதிபுள்ளொலிகூட்டப்பேர்தொறுநிரையடிமைகூட்டம்
கெழுவுதன்மயக்கம்பற்றுங்கோலாலங்கறைநீர்காடி
குழறுளையுடைப்பொருட்பேர்மயிரிசைக்குழன்முப்பேரே
அழிவென்பவீதல்கேடாமவிநெய்சோறமரருண்டி. (௧௦)

ழகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௨௱௭.

# ளகரவெதுகை.

குளநுதல்கரும்பின்கட்டிகுட்டமுமிட்டநாமம்
களமமர்க்களமேகண்டங்களாவிடங்கறுப்பேயில்லாள்
வளமைமாட்சிமைகொழுப்பாம்வாருணங்கடலுமேற்கும்
விளவென்பகமர்விளாவாம்விம்மலேங்குதலொலித்தல். (௧)

முளரியேவிறகுசெந்தீமுண்டகஞ்சிறுமைகாடாம்
விளரென்பதிளமைதாணேவெளுப்பொடுகொழுப்புமாகும்
களபமேயானைக்கன்றுகமழ்சாந்துகலவைமுப்பேர்
உளர்தலேசிதறலாகுந்தடவலுமுரைக்கற்பாற்றே. (௨)

உழையென்பது—இடம், மான், யாழினோர்நரம்பு. ௩.
குழை—தளிர், துவாரம், குண்டலம், சேறு. ௪. விழைவு—புணர்ச்சி,ஆசை. ௨. வெறுக்கை—பொன்,செல்வம். ௨. வழி—மரபு, இடம்,பின், வழி. ௪. வழங்கல்—கொடுத்தல், உலாவல் ௨.

ஈழம்—பொன், கள், சிங்களதேசம்.௩.எல்லை—அளவு,சூரியன்.௨.
மேழகம்—கவசம், ஆடு. ௨. வேளாண்மை—கொடை,உண்மை.௨.
காழியர்—வண்ணார், உப்புவாணிகர். ௨.
வேழம்—கரும்பு, யானை, கொறுக்கை, மூங்கில். ௪.

கூழ்—உணவு, பொன், பயிர். ௩.
காழ்—மணிவடம், பருக்கைக்கல், மரவயிரம், விதை. ௪.
யாழ்—மிதுனராசி, வீணை, அச்சுவினிநக்ஷத்திரம், திருவாதிரை நக்ஷத்திரம். ௪. கீழ்—இடம், கீழ்சாதி, கிழக்கு, கீழ்மை. ௪.

கோழி—கோழி, உறையூர். ௨. குய்யம்—மறைவு, பெண்குறி. ௨.
மூழி—குளம்,சோறு,அகப்பை. ௩. மூழை—அகப்பை,சோறு.௨.
முழம்—சுளகு, விசாகநக்ஷத்திரம் ௨.
அழில்—கொல்லல், யானை, படர்கொடி, கொடிக்கொத்தான். ௪.

தொழுதி—பறவையினொலி, கூட்டம், [பறவைக்கூட்டம்.] ௨.
தொழு—பசுக்கூட்டம், அடிமை, கூட்டம். ௩. கெழுவுதல்—மயக்கம், பற்று. ௨. கிலாலம்—இரத்தம், நீர், கஞ்சி. ௩.
குழல்—துளையுடைப்பொருள், மயிர், இசைக்குழல். ௩.
அழிவு—சாதல், கேடு. ௨. அவி—நெய், சோறு, தேவருணவு. ௩.

## ளகரவெதுகை.

குளமென்பது—நெற்றி, சர்க்கரை, தடாகம். ௩.
களம்—போர்க்களம், கழுத்து, களாச்செடி,நஞ்சு,கறுப்பு,மனைவி.
வளமை—மாட்சிமை,கொழுப்பு.௨. வாருணம்—கடல்,மேற்கு.௨.
விளவு—நிலப்பிளப்பு,விளாமரம்.௨.விம்மல்—அழுதல்,ஒலித்தல்.

முளரி—விறகு, நெருப்பு, தாமரை, நுண்மை, காடு. ௫.
விளர்—இளமை, வெண்மை, கொழுப்பு. ௩.
களபம்—யானைக்கன்று, சாந்து, கலவைச்சாந்து. ௩.
உளர்தல்—சிந்தல், தடவல். ௨.

குளிர்மழுநண்டிருத்தல்குளிர்கவண்மூழாமீன்முறை
நளிர்குளிர்பெருமைமொண்டுநாட்டியசெறிவுநாற்பேர்
ஒளிவட்டந்தான்கண்ணாடிசக்கரமிருபேரோதும்
இளியிசையிசித்தலெல்லையிணங்குதலுரித்தற்கும்பேர். (௩)

பளிதமென்பதுகர்ப்பூரம்பல்லமென்கணக்குமாகும்
வெளிலணில்வேழத்தம்பம்வெண்டயிர்கடைதறிப்பேர்
களிறென்பவத்தாளேகறையடிசுறவுபன்றி
ஒளியிருசுடரேதீயேயொளிப்பிடம்புகழுமாமே. (௪)

பாளிதஞ்சோறுகண்டசருக்கரைகுழம்புபட்டாம்
ஒளியேயானைக்கூடமொழுங்கென்றும்வழங்குநூலே
கோளிதொன்மரமேபத்திகொள்வோனுங்கொழிஞ்சியும்பேர்
மீளிதிண்ணியன்வலிப்பேர்மேன்மகன்பெருமைக்கும்பேர். (௫)

அளைதயிர்முழைபுற்றுருமசனியேயுருமுவச்சிரம்
உளைபரிமீதுகட்டுமயிர்பிறமயிருமோதும்
கிளையென்பதோர்பண்மூங்கில்கேளொடுகிளைத்தலும்பேர்
இளைபுயலிளமைவேலிதலைக்காவலிவைநாற்பேரே. (௬)

உள்ளலேநினைவுள்ளான்பேருழப்பென்பவலியுற்சாகம்
ஞெள்ளலேபள்ளமேன்மைநீண்டவீதியுமுப்பேரே
எள்ளலேநகையிழிப்பாம்யாமந்தெற்கிரவுசாமம்
ஞொள்கல்சோம்பிளைத்தலச்சக்குறிப்பென்றுநுவலற்பாலாம். (எ)

வள்ளென்பகாதுகூர்மைவலிவளம்வாளேவாராம்
வெள்ளையேமுசலிசங்குவெளிறுவெள்ளாடுவெண்பா
கள்வனேமுசுஞெண்டியானைகருநிறத்தவனேசோரன்
பள்ளியூர்சிற்றூர்கோயில்பாயல்கண்படைநீத்தோரூர். (அ)

விளக்கொளிசோதிநாளாம்வேள்வியேமகாளிதல்
அளக்கரேபுடவிசேறுப்பளங்கடல்கார்த்திகைப்பேர்
திளைத்தலேயனுபவித்தல்செறிதலேநிறைதன்முப்பேர்
இளைத்தலேயிளைப்பிரங்கலென்றூழேயிரவிவெய்யில். (௯)

பிள்ளையேவடுகன்காக்கைபெட்டைறூன்விரும்பல்வேண்டல்
மள்ளரேமள்ளர்வீரர்மறவர்க்குங்குறவர்க்கும்பேர்
உள்ளமேமுயற்சிநெஞ்சாமுஞற்றிழுக்கொடுதாளாண்மை
வள்ளியேவல்லிசெங்கைவளைபுனையிழைமுப்பேரே. (௧௦)

குளிரென்பது—மழுப்படை, நண்டு, தங்குதல், குளிர்ச்சி, கவண், முழவு, மீனொழுங்கு. எ. நளிர்-குளிர்ச்சி,பெருமை,நண்டு, நெருக்கம். ச. ஒளிவட்டம்-கண்ணாடி,சக்கராயுதம்.உ. இளி-ஏழிசையினொன்று,சிரித்தல், இகழ்ச்சிக்குறிப்பு, இணங்குதல்,உரித்தல்.

பளிதம்—கருப்பூரம், பல்லமென்னுமோரெண். உ.
வெளில்—அணில், யானைத்தூண், தயிர்கடைதறி. ௩.
களிறு—அத்தநக்ஷத்திரம், யானை சுறு பன்றி இவற்றினாண். உ.
ஒளி—சூரியன், சந்திரன், நெருப்பு, ஒளிப்பிடம், புகழ். ரு.

பாளிதம்—சோறு, கண்டசர்க்கரை, குழம்பு, பட்டுவர்க்கம். ச.
ஓளி—யானைக்கூடம், ஒழுங்கு. உ.
கோளி—ஆலமரம்,அத்திமரம்,கொள்வோன்,பூவாதுகாய்க்குமரம்
மீளி—திண்ணியன், வலிமை, மேன்மையுள்ளோன், பெருமை. ச.

அளை—தயிர், மலைக்குகை, புற்று. ௩.
அசனி—இடி, வச்சிராயுதம். உ. உளை—குதிரைக்கணிமயிர், பிறமயிர். உ. கிளை—ஒருபண், மூங்கில், உறவு, கிளைத்தல். ச.
இளை—மேகம், இளமை, வேலி, தலைக்காவல். ச.

உள்ளல்—நினைத்தல், உள்ளான்குருவி. உ. உழப்பு—வலிமை, உற்சாகம். உ. ஞெள்ளல்—பள்ளம், மேன்மை, வீதி. ௩. எள்ளல்—நகைப்பு, இகழ்ச்சி. உ. யாமம்—தென்றிசை,இரா, சாமம். ௩. ஞொள்கல்—சோம்பல்,இளைத்தல்,அச்சக்குறிப்பு.௩.

வள்-காது,கூர்மை,வலிமை,வளம்,வாள்,வார்.சு.வெள்ளை-பலபத்திரன்,சங்கு,வெண்மை,வெள்ளாடு,வெண்பா.ரு.கள்வன்-முசு,நண்டு, யானை, கரியன், திருடன். ரு. பள்ளி—மருதநிலத்தூர், [ஊர்] சிற்றூர், கோயில், மக்கட்படுக்கை, நித்திரை, முனிவரிருப்பிடம்.

விளக்கு—தீபம், சோதிநக்ஷத்திரம். உ. வேள்வி—யாகம், மகநக்ஷத்திரம், கொடை. ௩.
அளக்கர்—பூமி, சேறு, உப்பளம்,கடல், கார்த்திகைநக்ஷத்திரம்.ரு.
திளைத்தல்—அனுபவித்தல், நெருங்கல், நிறைதல். ௩.
இளைத்தல்—மெலிவு, இரங்கல். உ. என்றூழ்—சூரியன்,வெய்யில்.

பிள்ளை—வைரவக்கடவுள், காக்கை. உ. பெட்டல்—விரும்பல் வேட்கைப்பெருக்கம். உ.
மள்ளர்—உழவர், படைவீரர், திண்ணியர், குறிஞ்சிநிலமாக்கள்.ச.
உள்ளம்—முயற்சி, மனம். உ. உஞற்று—இழுக்கு, முயற்சி. உ.
வள்ளி—படர்கொடி, கைவளை, ஆபரணம். ௩.

காளமேயூதுகொம்புகழுநஞ்சுகருமைநாற்பேர்
வேளாறுமுகன்காமன்பேர்விபூதியூன்கொடுமைசெல்வம்
கோளிடையூறென்பான்கோள்கொலைகுணம்வலிபொய்கொள்கை
ஞாளியேசுணங்கன்கள்ளாநான்முகனருகன்வேதா. (கக)

களரென்பமிடறுகோட்டிகளர்நிலங்கருமைநாற்பேர்
தளமிலைபடையேசாந்துதாழிபூவிதழேமேடை
அளகமேமாதரோதியறன்மயிர்க்குழற்சிமுப்பேர்
தளைவிலங்கொடுதொடர்ச்சிதாட்சிலம்பாண்மயிர்ப்பேர். (கஉ)

புள்ளுவண்டவிட்டம்புட்பேர்புளகர்தர்ப்பணங்குமிழ்ப்பாம்
கள்ளென்பகளவுகள்ளாங்கனவிதீயிரவியன்றி
அள்ளுரஞ்செறிவுகாதேநடயிலும்பற்றிரும்புமாகும்
வெள்ளமெண்மிகுதிமுந்நீர்வேணுவேமூங்கில்வில்வாள். (கங)

வாளென்பதொளிகட்கப்பேர்வல்லரிதளிர்பைங்காயாம்
கூளிபேய்தமரேருசுகுறள்படைத்தலையன்கூட்டம்
தோளென்பபுயங்கையாகுஞ்சுந்தரியுமையேசுண்டன்
தேளென்பதனுடநாளேவிருச்சிகந்தெறுக்காலும்பேர். (கச)

அளியென்பநறவும்வண்டுமன்பொடுகொடையுநாற்பேர்
அளவையேயெல்லைநாளாமாசாரந்துகிறுமாரி
விளரியேயிளமையாழிலோர்நரம்பியாழ்நீள்வேட்கை
வளமென்பபதவியும்பல்பண்டமும்வனப்புமாகும். (கரு)

வள்ளமேமரக்கால்வட்டில்கடிகைவட்டிற்குமப்பேர்
வள்ளுரம்பசுவிறைச்சிவரைந்தலூன்பொதுவுமாகும்
அள்ளலேநரகஞ்சேறுமம்புநீர்புயல்வேயேவாம்
வெள்ளிலேலவிளாப்பாடைப்பேர்வேலன்வேள்வெறியாட்டாளன்.

காளையேயெருதுபாலைக்கதிபனல்லிளமையோன்பேர்
கூளியர்நண்பர்பூதகணவீரர்கொலைத்திறத்தோர்
கோளகைவட்டமோடுமண்டலிப்பாம்புங்கூறும்
கேள்வியேசெவிகல்விப்பேர்கிடங்ககழ்வாவியாமே. (கள)

இளமையேதண்மைகாமமிளமையின்பருவமுப்பேர்
அளறென்பநரகஞ்சேறுமக்காரம்புடைவைவெல்லம்
கிளரென்பகிரணத்தோடுகிளர்கோட்டுமலர்ப்பூந்தாதாம்
களரிபோர்க்களங்காடென்பகருமஞ்செய்யிடமுமாமே. (கஅ)

ளகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் உஎரு.

—ooo—

காளமென்பது-ஊதுகொம்பு,சூலம்,நஞ்சு,கறுப்பு.௪. வேள்-குமாரக்கடவுள்,மன்மதன்.௨.விபூதி-* தசை,பொல்லாங்கு,செல்வம்.
கோள்-இடையூறு,நவக்கிரகம்,கொலை,குணம்,வலிமை,பொய்,கொள்கை. ௭. ஞாளி—நாய்,கள். ௨. நான்முகன்-அருகன்,பிரமன்.

களர்—கழுத்து, கூட்டம், களர்நிலம், கறுப்பு. ௪.
தளம்—இலை, சேனை, சாந்து, சாடி, பூவிதழ், உபரிகை. ௬.
அளகம்—பெண்மயிர், கீர், மயிர்க்குழற்சி. ௩.
தளை—விலங்கு, தொடர்பு, சிலம்பு, ஆண்மயிர். ௪.

புள்—வண்டு, அவிட்டநக்ஷத்திரம், பறவை. ௩.
புளகம்—கண்ணாடி, மயிர்சிலிர்த்தல். ௨.
கள்—களவு, கள். ௨. கனலி—நெருப்பு, சூரியன், பன்றி. ௩.
அள்—வலிமை, நெருக்கம், காது, கூர்மை, பற்றிரும்பு. ௫.
வெள்ளம்—ஓரெண், மிகுதி,கடல். ௩. வேணு-மூங்கில்,வில்,வாள்.

வாள்—ஒளி, வாளாயுதம். ௨. வல்லரி—தளிர், பசுங்காய். ௨.
கூளி—பேய்,உறவு,எருது,குற்றம்,பூதம்,படைத்தலைவன், கூட்டம்.
தோள்—புயம், கை. ௨. சுந்தரி—துர்க்கை, † மூஞ்சூறு. ௨.
தேள்—அனுடநக்ஷத்திரம், விருச்சிகராசி, தேள். ௩.

அளி—கள், வண்டு, அன்பு, கொடை. ௪.
அளவை—எல்லை, நாள். ௨. ஆசாரம்—சீலை, தூய்மை,பெருமழை.
விளரி—இளமை,யாழிலோர்நரம்பு, நெய்தனிலத்தியாழ்,வேட்கைப்பெருக்கம். ௪. வளம்—பதவி, பலபண்டம், அழகு. ௩.

வள்ளம்—மரக்கால், வட்டில், நாழிகைவட்டில். ௩. வள்ளுரம்—பசுவினிறைச்சி, தசைப்பொது.௨. அள்ளல்—நரகம், சேறு.௨.
அம்பு—நீர், மேகம், மூங்கில், பாணம்.௪.வெள்ளில்—விளாமரம், பாடை. ௨. வேலன்—முருகக்கடவுள், வெறியாட்டாளன்.௨.

காளை—எருது, பாலைநிலத்தலைவன், கட்டிளமையோன். ௩.
கூளியர்—சினேகர், பூதகணவீரர், கொலையாளிகள். ௩.
கோளகை—வட்டம், மண்டலிப்பாம்பு. ௨.
கேள்வி—காது, கல்வி. ௨. கிடங்கு—அகழ், வாவி. ௨.

இளமை—தாழ்மை, காமம், இளமைப்பருவம். ௩.
அளறு—நரகம், சேறு. ௨. அக்காரம்—புடைவை, வெல்லம். ௨.
கிளர்—ஒளி, பூந்தாது. ௨.
களரி—போர்க்களம், காடு, தொழில்செய்யிடம். ௩.

—ooo—

* பூதி - தசை. † சுசுந்தரி - மூஞ்சூறு.

# றகரவெதுகை.

இறைவையேபுட்டிலேணியென்பகூர்மிகுதிகூர்மை
குறடென்பபலகைதிண்ணைகொண்மூவென்பதூவிண்மேகம்
புறவமோர்புள்ளுங்காடுமுல்லைநன்னிலனும்போற்றும்
புறணியேகுறிஞ்சிமுல்லைநிலத்தொடுபுறமுந்தோலும். (௧)

மறஞ்சினம்பிணக்குக்கூற்றுமலைந்தசேவகமுமாகும்
குறிஞ்சியோரிசையோர்பண்ணேகுறிஞ்சிசெம்முள்ளிக்கும்பேர்
பிறங்கலேமிகுதிவெற்புநிறைவொலிபெருமையைம்பேர்
குறும்பொறைகுன்றுகாடுகுறிஞ்சிநன்னிலத்தூர்முப்பேர். (௨)

தாறுவிற்குதையேயெல்லைதாழ்மரக்குலைமுட்கோலாம்
சேறென்பகும்பிசாரந்தித்திப்புவிழவுகள்ளே
ஊறென்பதீமைதீண்டலுயிர்க்கொலையிடையூறென்ப
ஏறிடிமுதலாளாகுமிடபமோடெருதுமப்பேர். (௩)

சிறையேவேறிடமாம்புள்ளின்சிறகொடுகாவலும்பேர்
கறையிறுத்திடலிரத்தங்கறுப்புரல்விடம்பேரைந்தே
முறையென்பகோசமேயூழ்முறைமையிம்முப்பேரென்ப
பிறழ்தலேநடுக்கம்வேறுபெயர்தலோடொளிவிடற்பேர். (௪)

ஏற்றலேகோடலென்பவெதிர்ந்துபோர்செய்தலும்பேர்
ஆற்றலேபொறைமுயற்சியதிகமேவலியேஞானம்
தோற்றலேவலிபிறப்புத்தோன்றுதல்புகழேநாற்பேர்
போற்றலேபுகழ்தலோம்பல்புறமென்பமுதுகுவீரம். (௫)

அற்றமேமறைவுஞ்சோர்வுமவகாசந்தானுமாகும்
குற்றல்குற்றுதல்பறித்தல்குரையென்பதிடைச்சொலோசை
எற்றென்பதிரக்கமொத்தலெறிதலெத்தன்மைத்தென்றல்
கொற்றியேதுர்க்கைநாமங்கோவிளங்கன்றுங்கூறும். (௬)

உறழ்வென்ப * புணர்வுகாலஞ்செறிவிடையீடொப்பைம்பேர்
உறவியேயெறும்புநீரூற்றுலைக்களமுறவுயிர்ப்பேர்
உறுகணென்பதுவேதுன்பமுறுபயமிடிநோய்நாற்பேர்
உறுவனேமுனிபுத்தன்பேருலக்கையேயுரோங்கலோணம். (௭)

விறப்பென்பசெறிவுவெற்றிவெருவுதல்பொருதனாற்பேர்
பொறுத்தலேபொறைதாங்கற்பேர்புந்திதான்புதனேபுத்தி
இறுத்தலேயொடித்தறங்கலியம்புதன்முப்பேரென்ப
கறுப்பிருள்சினக்குறிப்பாங்கன்றுகைவளைகன்றுமே. (௮)

---

* உணர்வு என்றும் பாடம்.

# றகரவெதுகை.



இறைவையென்பது—கூடை, ஏணி. உ. கூர்—மிகுதி. கூர்மை. உ.
குறடு—பலகை, திண்ணை. உ. கொண்மூ—ஆகாயம், மேகம். உ.
புறவம்—ஒருபறவை, காடு, முல்லைநிலம். ௩.
புறணி—குறிஞ்சிநிலம், முல்லைநிலம், புறம், தோல். ௪.

மறம்—கோபம், பிணக்கு, யமன், வீரம். ௪.
குறிஞ்சி—ஓரிசை, ஒருபண், குறிஞ்சிநிலம், செம்முள்ளி. ௪.
பிறங்கல்—மிகுதி, மலை, நிறைவு, ஒலி, பெருமை. ௫.
குறும்பொறை—மலை, [சிறுமலை] காடு, குறிஞ்சிநிலத்தூர். ௩.

தாறு—விற்குதை, அளவு, மரக்குலை, முட்கோல். ௪.
சேறு—சேறு, சாரம். இனிமை, திருவிழா, கள். ௫.
ஊறு—தீமை, தொடுதல், கொலை, இடையூறு. ௪.
ஏறு—இடி, அச்சுவினிநக்ஷத்திரம், இடபராசி, எருது. ௪.

சிறை—வேறிடம், பறவையினிறகு, காவல். ௩.
கறை—குடியிறை, இரத்தம், கறுப்பு, உரல், நஞ்சு. ௫.
முறை—புத்தகம், ஊழ், முறைமை. ௩.
பிறழ்தல்—நடுக்கம், வேறுதல், ஒளிசெய்தல். ௩.

ஏற்றல்—கொள்ளல், எதிர்த்துப்போர்செய்தல். உ.
ஆற்றல்—பொறை, முயற்சி, மிகுதி, வலிமை, ஞானம். ௫.
தோற்றல்—வலிமை, பிறத்தல், தோன்றுதல், புகழ். ௪.
போற்றல்—புகழ்தல், பாதுகாத்தல். உ. புறம்—முதுகு, வீரம். உ.

அற்றம்—மறைவு, சோர்வு, சமயம். ௩.
குற்றல்—குற்றுதல், பறித்தல். உ. குரை—ஓரிடைச்சொல், ஒலி. உ.
எற்று—இரக்கக்குறிப்பு, அடித்தல், எறிதல், எத்தன்மைத்தென்றல்.
கொற்றி—துர்க்கை, பசுவினிளங்கன்று. உ.

உறழ்வு—புணர்ச்சி, காலம், நெருக்கம், இடையீடு, உவமை. ௫.
உறவி—எறும்பு, ஊற்று, உலைக்களம், உறவு, உயிர். ௫.
உறுகண்—துன்பம், அச்சம், தரித்திரம், வியாதி. ௪. உறுவன்—முனிவன், அருகன். உ. உலக்கை—உலக்கை, திருவோணநக்ஷத்திரம்.

விறப்பு—நெருக்கம், வெற்றி, அச்சம், போர். ௪.
பொறுத்தல்—பொறுமை, சுமத்தல். உ. புந்தி—புதன், புத்தி. உ.
இறுத்தல்—ஒடித்தல், தங்குதல், சொல்லுதல். ௩.
கறுப்பு—கருமை, கோபக்குறிப்பு. உ. கன்று—கைவளை, கன்று. உ.

பொறிமரக்கலமேசெல்வம்பூமகளெந்திரங்கள்
அறிவிலாஞ்சனையெழுத்தோடைம்பொறிவரியொன்பான்பேர்
வெறிவெருவுதல்கலக்கம்வெறியாட்டுவட்டநாற்றம்
குறியபேய்துருவைகள்ளுக்கூறுநோயொன்பதாமே. (௯)

உறைபொருண்மருந்துவாழ்நாளுணவுவெண்கலமேகாரம்
எறிபடைக்கலத்தின்கூடேயெண்குறித்திறுதிபெய்தல்
நறியபாற்பிரையிடைச்சொனகரநீர்த்துளியீராறும்
அறைமுழைமோதல்பாறைதிரைசிற்றின்மொழியாறுமே. (௧௦)

இறைசிவன்கடன்வேந்தன்கையிறையிறுப்பிறைசிறந்தோன்
சிறுமைபுள்ளிறகுதங்கல்சென்னிகூனிறப்பீராறே
உறையுளென்பதுநாடுரோமுறுதியேநன்மைகல்வி
பொறைமலைதுறுகல்பாரம்பொறைசுமைகருப்பம்பூமி. (௧௧)

இறும்புதாமரையின்பூவேமலைகுறுங்காடுமேற்கும்
இறும்பூதுதகைமைவெற்போடதிசயங்குழைதூறென்றும்
கறங்கலேசுழலலோசைகதிரென்பதிரவிசோதி
பறம்புயர்மலைமுலைப்பேர்பாய்மாவேகுதிரைவேங்கை. (௧௨)

கூற்றென்பதியமன்சொல்லாங்கோமானேமூத்தோன்பன்றி
நாற்றநாறுதனேன்றற்பேர்நனவென்பதகலந்தேற்றம்
ஊற்றென்பதூன்றுகோலுமுறவியுமிருபேரோதும்
நோற்றலேபொறைதவப்பேர்நுணங்கென்பநுண்மைதேமல். (௧௩)

கற்பமேபிரமன்வாழ்நாள்கற்பகதருசுவர்க்கம்
பொற்பென்பதழகினோடுபொலிவுமொப்பனையுமாகும்
பற்பமேபதுமந்தூளாம்பழங்கணேதுன்பமோசை
உற்கைதாரகைதீக்கொள்ளியுண்டிதான்புசித்தல்சோறே. (௧௪)

முற்றல்காழ்கோடன்மூப்புமுடிவுடன்வளைத்தனுற்பேர்
நெற்றியேநுதலின்பேருநெடும்படையுறுப்புமாகும்
கொற்றமேவன்மைவெற்றிகோவரசியன்மூப்பேரே
எற்றுதல்புடைத்தலோடேயெறிதலுமிருபேராமே. (௧௫)

அறுகென்பசிங்கமோர்புல்யாளியுமாகுமுப்பேர்
வறிதென்பதருகலேசற்றறியாமைபயனில்வார்த்தை
மறலியேமயக்கங்கூற்றுமறவிகண்மறதியீனம்
குறளென்பகுறளும்பேயுங்குறுமையுங்கூறுமுப்பேர். (௧௬)

பொறியென்பது—தோணி, செல்வம், இலக்குமி, எந்திரம், அறிவு, அடையாளம், எழுத்து, ஐம்பொறி, தேமல். கூ.
வெறி—அச்சம், கலக்கம், வெறியாட்டு, வட்டம், வாசனை, பேய், ஆடு, கள், வியாதி. கூ.

உறை—பொருள், மருந்து, வாழ்நாள், உணவு, வெண்கலம், காரம், ஆயுதவுறை, ஒரிலக்கக்குறிப்பு, பாலிடுபிரை, ஒர்நடைச்சொல், நகரம், நீர்த்துளி. கஉ.
அறை—மலைமுழை, மோதல், பாறை, திரை, சிற்றில், சொல். கூ.

இறை—சிவன், கடன், அரசன், கையிறை, குடியிறை, உயர்ந்தோன், அற்பம், பறவையினிறகு, தங்கல், தலைமை, கூன், வீட்டிறப்பு. கஉ.
உறையுள்—நாடு, ஊர். உ. உறுதி—நன்மை, கல்வி. உ.
பொறை—மலை, துறுகல், பாரம், பொறுமை, சுமை, கருப்பம், பூமி.

இறும்பு—தாமரைப்பூ, மலை, குறுங்காடு. ங.
இறும்பூது—பெருமை, மலை, அதிசயம், தளிர், சிறுதூறு. ரு.
கறங்கல்—சுழலல், ஒலி. உ. கதிர்—சூரியன், ஒளி. உ.
பறம்பு—மலை, முலை. உ. பாய்மா—குதிரை, புலி. உ.

கூற்று—யமன், சொல். உ. கோமான்—மூத்தோன், பன்றி. உ.
நாற்றம்—மணத்தல், தோன்றல். உ. நனவு—அகலம், தெளிவு. உ.
ஊற்று—ஊன்றுகோல், நீரூற்று. உ. நோற்றல்—பொறுத்தல், தவஞ்செய்தல். உ. நுணங்கு—நுண்மை, தேமல். உ.

கற்பம்—பிரமன்வாழ்நாள், கற்பகவிருக்ஷம், தேவலோகம். ங.
பொற்பு—அழகு, பொலிவு, அலங்காரம். ங. பற்பம்-தாமரை, துகள்.
பழங்கண்—துன்பம், ஒலி. உ. உற்கை-விண்மீன், கடைக்கொள்ளி.
உண்டி—உண்ணல், சோறு. உ.

முற்றல்—வயிரங்கொள்ளல், மூப்பு, முற்றுப்பெறுதல், வளைத்தல். ச.
நெற்றி—நெற்றி, படையுறுப்பு. உ.
கொற்றம்—வலிமை, வெற்றி, அரசியல். ங.
எற்றுதல்—அடித்தல், எறிதல். உ.

அறுகு—சிங்கம், ஒருபுல், யாளி. ங.
வறிது—குறைதல், அற்பம், அறியாமை, பயனில்சொல். ச.
மறலி—மயக்கம், யமன். உ. மறவி—கள், மறதி, இழிவு. ங.
குறள்—வாமனம், பேய், குறுமை. ங.

விறலென்பவலிவென்றிப்பேர்விழைந்தோனேநண்பன்வேட்டோ [ன்
நொறிலென்பவிரைவிஞேடுநடக்குமிருபேராமே
நெறிவழிநீதியென்பவிருமித்தல்படைப்பாராய்தல்
பறைபறைவசனத்தோடுபறக்கும்புள்ளிறகுமப்பேர். (கஎ)

றகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - உகஉ.

# ணகரவெதுகை.

மனவுநன்மணிசங்கக்காம்வரைமலையிறைவேய்மட்டாம்
தனிதமியொப்பின்மைப்பேர்சாந்தமேகமையுஞ்சாந்தும்
முனைபகைநுனிவெறுப்பாமுளேவேயங்குரமேபிள்ளை
யினமிருங்கிளையமைச்சாமெழில்வண்ணமிளமைக்கும்பேர். (க)

ஆனகம்படகத்தின்பேராகுந்துந்துபியுமப்பேர்
மானமேயளவிலச்சைவிமானமேபெருமைகுற்றம்
பானலேபழனநெய்தல்பாங்கரேயிடம்பக்கப்பேர்
மானலேமயக்கமொப்பாம்வருடமேமழையுமாண்டும். (உ)

தானமேமதநீராட்டுத்தருகொடைசுவர்க்கநாற்பேர்
பீனமேபருமைபாசிபேடென்பபேடியூரே
நானமேபூசும்பூச்சுநானமுங்குளிக்குநீரும்
வானமாகாயமென்பமழையுலர்மரமுமாமே. (ங)

வாணிமேற்கட்டிசேணேவண்டுகிற்கொடிமுப்பேரே
ஆணியுத்தராடமூலஞ்சேதமோர்மாதமென்ப
ஏணேயேயொழிபுமற்றையெனுமிடைச்சொற்குமப்பேர்
ஆணியம்பொழுதுநாளாமனந்தையோர்சத்திபூமி. (ச)

முன்னலேநினைவுநெஞ்சாமுன்னஞ்சீக்கிரியோடெண்ணம்
கன்னல்சர்க்கரைகரும்புசரகநாழிகைவட்டிற்பேர்
மன்னனுத்தரட்டாதிப்பேர்மன்னவன்முனுமாகும்
கின்னரநீர்ப்புள்யாழாங்கிடக்கைபூதலம்பாயற்பேர். (ரு)

பின்னேயேபின்றைதங்கைபெரியமாற்குரியதேவி
கொன்பயனிலாமைகாலங்கூறியபெருமையச்சம்
பொன்னென்பவனப்பிரும்புபூமகள்வியாழநாற்பேர்
மன்னிலைமிகுதிவேந்தேவாழிவாழ்கெனவிடைச்சொல். (சு)

விறலென்பது—வலிமை, வெற்றி. உ. விழைந்தோன்—சிநேகன், கணவன். உ. தொழில்—விரைவு, நடக்கம். உ. நெறி—வழி, நீதி.
நிருமித்தல்—சிருட்டித்தல், ஆராய்தல். உ.
பறை—வாச்சியம், சொல், பறவையினிறகு. ங.

—oo:<:oo—

# னகரவெதுகை.

மனவென்பது—மணிப்பொது, சங்கு, அக்குமணி. ங.
வரை—மலை, கையிறை, மூங்கில், அளவு. ச. தனி—தனிமை, ஒப்பின்மை. உ. சாந்தம்—பொறுமை, சந்தனம். உ.
முனை-பகை, நுனி, வெறுப்பு. ங. முளை-மூங்கில், அங்குரம், மகன். ங.
இனம்—சுற்றம், மந்திரி. உ. எழில்—அழகு, இளமை. உ.

ஆனகம்—படகம், துந்துபி. உ. மானம்-அளவு, வெட்கம், விமானம், பெருமை, குற்றம். ரு.
பானல்—வயல், நெய்தல். உ. பாங்கர்—இடம், பக்கம். உ.
மானல்—மயக்கம், ஒப்பு. உ. வருடம்—மழை, ஆண்டு. உ.

தானம்—யானைமதம், நீராடல், கொடுத்தல், தேவலோகம். ச.
பீனம்—பருமை, பாசி. உ. பேடு—பேடி, ஊர். உ.
நானம்—பூசும்பூச்சு, கஸ்தூரி, குளிக்குநீர். ங.
வானம்—ஆகாயம், மழை, உலர்ந்தமரம். ங.

வானி—மேற்கட்டி, சேனை, துகிற்கொடி. ங.
ஆனி-உத்தராடநக்ஷத்திரம், மூலநக்ஷத்திரம், கேடு, ஆனிமாசம் ச.
எனை—ஒழிவு, மற்றையென்னுமிடைச்சொல். உ.
ஆனியம்—காலம், நாள். உ. அனந்தை—ஒருசத்தி, பூமி. உ.

முன்னல்—நினைவு, நெஞ்சு. உ. முன்னம்—சீக்கிரிமரம், எண்ணம்.
கன்னல்—சருக்கரை, கரும்பு, கரகம், நாழிகை, நாழிகைவட்டில்.
மன்னன்—உத்தரட்டாதிநக்ஷத்திரம், அரசன். உ.. கின்னரம்—நீர்வாழ்பறவை, வீணை. உ. கிடக்கை—பூமி, மக்கட்படுக்கை. உ.

பின்னை—பின்பு, தங்கை, இலக்குமி. ங.
கொன்—பயனின்மை, காலம், பெருமை, அச்சம். ச.
பொன்—அழகு, இரும்பு, இலக்குமி, வியாழன். ச.
மன்—நிலை, மிகுதி, அரசன். ங. வாழி-வாழ்கெனல், ஒரிடைச்சொல்.

வன்னியேபிரமசாரியளர்கிளிசமிசெந்தீயாம்
சென்னிகம்பாணன்சோழன்சீருளீயஞ்செம்பாகும்
கன்னிபெண்ணழிவிலாமைகட்டிளமைக்கும்பேரே
தென்னிசைவனப்புத்தாழைதெற்கொடுகற்புமாமே. (௭)

குன்றுவேதண்டமாகுங்குறைவொடுசதயமுப்பேர்
அன்றிலோர்புள்ளுமூலநாளெனவாமிரண்டே
பன்றமேவெளியினாமம்வாசமம்பலமுமப்பேர்
மன்றலேபரிமளப்பேர்மருவுகல்யாணமும்பேர். (௮)

தனமுலைபொன்னான்கன்றுசந்தமுத்தனமைம்பேராம்
கனவுநித்திரைமையற்பேர்கலிங்கஞ்சாதப்புள்ளாடை
கனைசெறிவொலியாமென்பகவரியேசவரிமேதி
பனுவலேகிளவிநூலாம்படப்பையூர்ப்புறமேதோட்டம். (௯)

அனந்தனேசிவன்மால்சேடனலாயுதனருகனைந்தே
அனந்தமேமுடிவிலாமையாடகம்விண்முப்பேரே
அனங்கமேயிருவாட்சிப்பேராகுமல்லிகைக்குமப்பேர்
தனஞ்சயன்பார்த்தனேசெந்தழலொருகாற்றுமாமே. (௧0)

சானகிசீதைமூங்கிறனுவென்பதுடல்வில்லற்பம்
சானுவேமலைமுழந்தாண்மலைப்பக்கந்தானுமாகும்
சோணையேயோணநாளும்விடாமழைசொரிதலும்பேர்
கானலேமலைச்சார்சோலைகடற்கரைச்சோலைபேய்த்தேர். (௧௧)

வானென்பவிசும்புமேகமழையொடுபெருமைநாற்பேர்
தானையேசேனையாடைபடைக்கலந்தானுமாகும்
கானந்தேரிசையேபேதைகாடுதற்பாடியைம்பேர்
ஏனலேசெந்தினைப்பேர்தினைப்புனமென்றுமாமே. (௧௨)

முனியென்பதியானைக்கன்றுமுனிவன்வில்லகத்திநாற்பேர்
துனியென்பபுலவிநீட்டந்துன்பநோயாறுகோபம்
பனியென்பநடுக்கந்துன்பம்பயங்குளிரிமமைம்பேரே
சினையென்பமுட்டைபீளாமரக்கொம்புஞ்செப்புமப்பேர். (௧௩)

மானேசாரங்கமாவின்பொதுவொடுமகரராசி
கானேநன்மணங்காடென்பகல்லியூர்க்குருவியாமை
ஏனாதிமஞ்சிகன்மந்திரியுந்தந்திரியுமென்ப
மீனேசித்திரைநாள்வான்மீன்மயிலையுமேவுமப்பேர். (௧௪)

வன்னியென்பது—பிரமசாரி, கிளி, வன்னிமரம், நெருப்பு. ௪.
சென்னி—தலை, பாணன், சோழன். ௩.
சிருள்—ஈயம்,செம்பு.௨. கன்னி—பெண்,அழிவின்மை,கட்டிளமை.
தென்—இசை, அழகு, தென்னமரம், தெற்கு, சுற்பு. ௫.

குன்று—மலை, குறைதல், சதயநக்ஷத்திரம். ௩.
அன்றில்—ஒருபறவை, மூலநக்ஷத்திரம். ௨.
மன்றம்—வெளி, வாசனை, சபை. ௩.
மன்றல்—மிக்கவாசனை, விவாகம். ௨.

தனம்—முலை,பொன்,பசுவின்கன்று,சந்தனம்;[அழகு]பசுமுதலிய முப்பொருள். ௫.
கனவு—நித்திரை, மயக்கம். ௨. கலிங்கம்—வானம்பாடி, சீலை.௨.
கனை—நெருக்கம், ஓசை. ௨. கவரி—சாமரம், எருமை. ௨.
பனுவல்—சொல், நூல். ௨. படப்பை—ஊர்ப்புறம்,தோட்டம்.௨.

அனந்தன்—சிவன், திருமால், சேடன், பலபத்திரன், அருகன்.௫.
அனந்தம்—அளவின்மை, பொன், ஆகாயம். ௩.
அனங்கம்—இருவாட்சி, மல்லிகை. ௨.
தனஞ்சயன்—அருச்சுனன், நெருப்பு, தசவாயுக்களுளொன்று. ௩.

சானகி—சீதை, மூங்கில். ௨. தனு—உடம்பு, வில், அற்பம். ௩.
சானு—மலை, முழந்தாள், மலைச்சாரல். ௩.
சோனை—திருவோணநக்ஷத்திரம், விடாமழை. ௨.
கானல்—மலைச்சாரலிற்சோலை, கடற்கரையிற்சோலை, பேய்த்தேர்.

வான்—ஆகாயம், மேகம், மழை, பெருமை. ௪.
தானை—சேனை, வஸ்திரம், ஆயுதப்பொது. ௩.
கானம்—தேர், இராகம், அறிவிலி, காடு, வானம்பாடி. ௫.
ஏனல்—செந்தினை, தினைப்புனம். ௨.

முனி—* யானைக்கன்று, முனிவன், வில், அகத்தி. ௪.
துனி—புலவிநீட்டம், துன்பம், வியாதி, நதி, கோபம். ௫.
பனி—நடுக்கம், துன்பம், அச்சம், குளிர்ச்சி, பனி. ௫.
சினை—முட்டை, கருப்பம், மரக்கொம்பு. ௩.

மான்—மான், விலங்கின்பொது, மகரராசி. ௩.
கான்—வாசனை, காடு. ௨. கல்வி—ஊர்க்குருவி, ஆமை. ௨.
ஏனாதி—நாவிதன், மந்திரி, படைத்தலைவன். ௩.
மீன்—சித்திரைநக்ஷத்திரம், நக்ஷத்திரம், மீன். ௩.

* கயமுனி - யானைக்கன்று.

ஞானமேயறிவுகல்விநல்லதத்துவநூன்முப்பேர்
யானமேமரக்கலத்தோடெழிலூர்திவிகற்பிரண்டாம்
ஏனமோலைக்குடைப்பேரெறுழியுமறமுமப்பேர்
மேனியேவடிவமென்பநிறத்தையும்விளம்பலாமே. (கரு)

ஞானமென்பது—அறிவு, வித்தை, ஞானநூல். ங.
யானம்—மரக்கலம், வாகனவிகற்பம். உ.
ஏனம்—ஓலைக்குடை,பன்றி,பாவம். ங. மேனி—உருவம்,நிறம். உ.

அன்னையேமுன்பிறந்தாடோழிதாயாகுமென்ப
அன்னமோதிமமேசோறுமாகாரமுடனெய்யுண்டி
தன்மையேரியல்பினோடுதன்மையினிடமுஞ்சாற்றும்
பன்னலேநெருக்கம்வார்த்தைபருத்தியின்பேருமாமே. (கசு)

அன்னை-முன்பிறந்தாள், தோழி, தாய். ங. அன்னம்-அன்னப்புள், சோறு. உ. ஆகாரம்-உடம்பு,நெய்,உணவு. ங. தன்மை—அழகு, குணம்,தன்மையிடம். ங. பன்னல்-நெருக்கம்,சொல்,பருத்தி. ங.

வனமேநீர்மிருதிகாடுவளர்சோலைதுளசியீமம்
மனுவேமந்திரமோர்நூலாமண்ணைபேயிளமைமூடன்
புனையென்பதழகினோடுபொலிவுமொப்பனையுமாகும்
மனையென்பமனைவிவீடாம்வதுவையேமணங்கல்யாணம். (கஎ)

வனம்—நீர், மிருதி, காடு, சோலை, துளசி, சுடுகாடு. சு.
மனு—மந்திரம், ஒருதருமநூல். உ. மண்ணை—பேய், இளமை, அறிவிலான். ங. புனை—அழகு, பொலிவு, அலங்காரம். ங.
மனை—இல்லாள், வீடு. உ. வதுவை—வாசனை, விவாகம். உ.

அன்வினையொடுபெயர்க்கும்விகுதிசாரியையுமாகும்
மன்னிடுங்கனைத்தலென்பதிருளோசையிருபேர்வைக்கும்
இன்னனவொருசொற்பல்பேர்க்கியற்கவிமுந்நூற்றெண்பான்
சொன்னவன்குணபத்திரன்றாள்சூடுமண்டலவன்றானே. (கஅ)

அன்—ஒருவினைவிகுதி, ஒருபெயர்விகுதி, ஒருசாரியை. ங.
கனைத்தல்—இருள், ஒலி. உ.

னகரவெதுகை முற்றிற்று.

ஆக விருத்தம் - ஙஅ0.

ஒருசொற்பல்பொருட் பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.



உ

கணபதி துணை.

# பன்னிரண்டாவது

## பல்பெயர்க்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

### காப்பு.

சொல்வகையெழுத்தெண்ணெல்லாந்தொல்லைநாளெல்லையாக
நல்வகையாக்கும்பிண்டிநான்முகனுனுந்தீமை
வெல்வினைதொடங்கச்செய்துவீடருள்வோன்றாள்போற்றிப்
பல்வகைப்பெயர்க்கூட்டத்தினொருபெயர்பகரலுற்றும்.

இதன்பொருள். தொல்லை நாள் - ஆதிகாலத்திலே,—சொல் வகை எழுத்து எண் எல்லாம் - சொல்லப்படும் பாகுபாட்டினையுடைய இலக்கணமுங் கணிதமுமாகிய நூல்கள் முழுமையும்,— எல்லை ஆக - வரையறைப்பட,—நல் வகை ஆக்கும் பிண்டி நான்முகன் - செப்பமாக அருளிச்செய்த அசோகமரத்தின் நிழலின்கண்ணே வீற்றிருக்கும் நான்கு முகங்களை யுடையவரும்,—நாளும் தீமை வெல்வினை தொடங்கச்செய்து - நாடோறும் தீங்கை வெல்லுகின்ற சற்கருமங்களை (மனிதர்கள்) தொடங்கும்படி செய்து,— வீடு அருள்வோன் தாள் போற்றி - அவருக்கு முத்தியைக் கொடுத்தருளுபவருமாகிய அருகக்கடவுளது திருவடிகளைத் துதிசெய்து,— பல்வகைப் பெயர்க் கூட்டத்தின் ஒரு பெயர் பகரலுற்றும் - பல்பெயர்க்கூட்டத் தொருபெயர்த் தொகுதியை (யாம்) கூறலுற்றும் என்றவாறு.

# பன்னிரண்டாவது.

கூறியகூறினுங்குற்றமொன்றிலையருத்தம்
வேறுளதாயினென்றுவிதித்தலின்விரித்துமுன்னம்
ஊறிலாச்சிறப்புவர்க்கமுரைத்திவட்பொதுவர்க்கத்தில்
ஏறியவூழுஞ்சொல்வாமேகமேவீடுபேறு.

இ - ள். கூறிய கூறினும் - முன் சொன்னவற்றைப் பின்னுஞ் சொல்லினும்—வேறு அருத்தம் உள்தாயின் - பிறிதுபொருள் உளதாயின்,—குற்றம் ஒன்று இலை என்று - அங்ஙனம் சொன்னதனாற் குற்றம் ஒன்றும் இல்லையென்று—விதித்தலின் - அறிஞர் சொல்லுதலால்,—முன்னம் - முன்னே—ஊறு இலாச் சிறப்புவர்க்கம் விரித்து உரைத்து - குற்றம் இல்லாத ஒருசொற்பலபெயர், பலபொருளொருசொல் என்னும் இருவகைச் சிறப்புத் தொகுதிகளை விரித்துக்கூறி,—இவண் - இங்கே—பொதுவர்க்கத்தில் - பல்பெயர்க்கூட்டத் தொருபெயர்த் தொகுதியில்—ஏறிய ஊழும் சொல்வாம் - ஒன்றிரண்டு முதலிய எண்களால் உயர்ந்தமுறையினையும் சொல்வாம். எ - று.

முதற்பத்துத்தொகுதியும் அருகன், சிவன்முதலிய பலசொற்களைத் தனித்தனி எடுத்துக்கொண்டு அவற்றிற்குரிய பரியாயச் சொற்களைக் கூறுதலாலும், பதினொராவது தொகுதி பகவன்,பகல் முதலிய சொற்களைத் தனித்தனி எடுத்துக் கொண்டு அவற்றிற்குரிய பலபொருள்களைக் கூறுதலாலும் இவ்விருகூற்றுப்பதினொரு தொகுதியும் சிறப்புத்தொகுதியென்றும், பன்னிரண்டாவது பல்பெயர்க்கூட்டங்களை ஒன்றிரண்டு முதலிய இலக்கமுறைகளால் பொதுவில்வைத்து விளக்குதலால் இது பொதுத்தொகுதி என்றும் சொல்லப்பட்டன.

ஏகம் - முத்தி. (க)

இருமையேயிம்மையோடுமறுமைநல்வினையினோடு
மருவுதீவினைகளென்பமற்றிருவினையினுமம்
இருவகைத்தோற்றமென்றேயிடுஞ்சராசரங்களென்ப
இருசுடர்மதியமற்றையிரவியென்றியம்பலாமே. (௨)

இருமரபன்னைதந்தையெய்தியவழியாங்கந்தம்
இருவகைநற்கந்தங்களேற்றதுர்க்கந்தமென்ப
இருவகையறங்களென்பவில்லறந்துறவறங்கள்
இருவகைப்பொருள்கள்கல்வியேற்றசெல்வங்களாமே. (௩)

இருவகைக்கூத்துத்தானேயியன்றதேசிகமேமார்க்கம்
கருதுமுப்பழங்களின்பேர்கதலிமாபலாவென்றுமே
விரைவொடுசெய்தலேசெய்வித்தலேயுடம்பாடென்ன
வருமுறைபாவமோடுபுண்ணியவழக்கமாமே. (௪)

மும்மையேயும்மையிம்மைமொழிந்திடுமறுமையென்ப
செம்மையாம்வாக்குக்காயந்திகழ்மனமுப்பொறிப்பேர்
மும்மையாங்காலப்பேரின்மொழியிறப்பெதிர்நிகழ்ச்சி
மும்மையாஞ்செய்கைபண்ணன்முறைகாத்தல்சிதைத்தலாமே. (௫)

மூன்றிடமென்பதன்மைமுன்னிலைபடர்க்கையாகும்
ஆன்றமுந்நிலங்கள்பூமியந்தரஞ்சுவர்க்கமென்ப
மூன்றுகுற்றங்கள்காமமுதிர்சினமயக்கந்தானே
மூன்றுசெஞ்சுடரேதிங்கண்முளைத்தெழுபரிதியங்கி. (௬)

பழித்திடல்புகழ்தன்மெய்ம்மைபயக்குமும்மொழிப்பேராகும்
கிழிப்பில்வேதத்தின்முத்தீகாருகபத்தியத்தோ
டழிப்பிலாத்தெற்கிலங்கியாகவநீயமென்ப
ஒழிப்பிலாவுயிரிலங்கியுதரம்வீந்துறுசினத்தீ. (௭)

ஏற்றசாத்துவிகத்தோடேயிராசதந்தாமதங்கள்
ஆற்றுமுக்குணங்களாகுமதிற்சாத்துவிகமேஞானம்
சாற்றியதவமேமெய்ம்மைசால்புநல்லருளுண்டாதல்
போற்றியவாமைபோலைம்புலனடக்குதலுமாமே. (௮)

தானமேதவமேமெய்ம்மைதருமம்பேணுதலினோடு
ஞானமேகல்விகேள்விநலனிவைதெரிதருமே
ஈனமொன்றில்லார்வைத்தவிராசதகுணங்களென்ப
ஊனமிலுறுவன்முன்னுரைத்திடுமுறைமைதானே. (௯)

௨. இருபிறப்பு—இம்மை, மறுமை.
இருவினை—நல்வினை, தீவினை.
இருவகைத்தோற்றம்—சரம், அசரம்.
இருசுடர்—சந்திரன், சூரியன்.

௩. இருமரபு—தாய்மரபு, தந்தைமரபு.
இருவகைக்கந்தம்—நற்கந்தம், துர்க்கந்தம்.
இருவகையறம்—இல்லறம், துறவறம்.
இருவகைப்பொருள்—கல்விப்பொருள், செல்வப்பொருள்.

௪. இருவகைக்கூத்து—தேசிகம், மார்க்கம்.
முப்பழம்—வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம்.
மூவகைப்பாவபுண்ணியவழக்கம்—செய்தல், செய்வித்தல், உடன்படல்.

௫. முப்பிறப்பு—உம்மை, இம்மை, மறுமை.
முப்பொறி—வாக்கு, காயம், மனம்.
முக்காலம்—இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம்.
முத்தொழில்—படைத்தல், காத்தல், அழித்தல்.

௬. மூவிடம்—தன்மை, முன்னிலை, படர்க்கை.
மூவுலகம்—பூமி, அந்தரம், சுவர்க்கம்.
முக்குற்றம்—காமம், வெகுளி, மயக்கம்.
முச்சுடர்—சந்திரன், சூரியன், அக்கினி.

௭. மூவகைமொழி—பழித்தல், புகழ்தல், மெய்கூறல்.
மூவகைவேதத்தீ—காருகபத்தியம், தக்கிணாக்கினி, ஆகவநீயம்.
மூவகையுயிர்த்தீ—உதராக்கினி, காமாக்கினி, கோபாக்கினி.

௮. முக்குணம்—சாத்துவிகம், இராசதம், தாமதம். சாத்துவிகச்செயல்—ஞானம், தவம், மெய்ம்மை, மேன்மை, அருளுடைமை, ஐம்புலனடக்கல்.

௯. இராசதச்செயல்—தானம், தவம், மெய்மை, தருமம்பேணல், ஞானம், கல்வி, கேள்வி.

தாமதநிறைபேருண்டிசாம்புதல்சோம்புமூரி
காமமேநீதிகேடுகண்ணுறக்கம்பொச்சாப்பு
நாமமாஞ்சலமேவஞ்சநாட்டியவிம்மூப்பாலும்
மாமலிவுடனேமற்றமெலிவொடுசமனுமாமே. (கo)

மறுவறுதானமூன்றுவகைதமிலுத்தமந்தான்
பெறுமுறையோம்பிவைத்துப்பேணியபொருளைத்தானே
குறுகியேபெறுகவென்றுகுறையிரந்தடங்கிநோற்கும்
உறுதவர்க்குவந்துதாழ்ந்தேயுபகாரஞ்செய்தலாமே. (கக)

சீருறுப்பில்லார்மாதர்சிதடராதுலர்க்குநல்கல்
வாருறுகொங்கைநல்லாய்மத்திமதானமென்ப
ஆர்வமேபுகழ்கண்ணோட்டமச்சங்கைம்மாறுமற்றைக்
* காரணமின்னவெல்லாங்கடைப்படுதானமாமே. (கஉ)

திரிகடுகஞ்சுக்கோடுதிப்பலிமிளகுசெப்பும்
திரிபலையென்பதானேதிகழ்கடுநெல்லிதான்றி [ப
புரமூன்றுசெம்பொன்வெண்பொன்போற்றிய கரும்பொன்னென்
விரவியமேடமேறுமிதுனமேயருக்கன்வீதி. (கங)

முல்லையேகுறிஞ்சிநெய்தன்மொழிந்திடுமருதமென்ப
நல்லநானிலமென்றோதும்நாற்கதியும்பர்மக்கள்
சொல்லியவிலங்கினோடுநரகர்சாதுரங்கமென்ப
வெல்லுமால்யானைதேரேவெம்பரிகாலாளாமே. (கச)

குறளைபொய்கடுஞ்சொல்லோடுகூறியபயனில்வார்த்தை
நறுநுதல்கேட்டிமற்றைநால்வகையிழிசொல்லாகும்
மறுவிலாவிருக்கினோடுவளமிகும்யசுவேசாமம்
அறைதருமதர்வமென்பவாமிவைவேதநான்கே. (கரு)

அறமொடுபொருளின்பம்வீடானநாற்பொருள்களாகும்
உறுமிவைதம்மைக்கேட்டலொத்தநால்வகைக்கேள்விப்பேர்
செறிகடம்வெற்புநீரேதிணிமதிலரணநான்காம்
அறிவொடுநிறையேயோர்ப்புக்கடைப்பிடிகுணநான்காமே. (கசு)

நாணமேமடமேயச்சநாட்டியபயிர்ப்புநான்கும்
மாணிழைமடநல்லார்க்குவைத்தநாற்குணங்களாகும்
பேணியதவமொழுக்கம்பெருங்கொடைகல்விநான்கிற்
பூணுநற்பொருள்கணன்கும்புண்ணியத்தோற்றமாமே. (கஎ)

* காரணங்கடைப்பாடேழும் என்றும் பாடம்.

கಂ. தாமதச்செயல்—பேருண்டி, ஒடுக்கல், சோம்பு, மூரி, காமம், நீதிகேடு, நித்திரை, மறதி, தணியாக்கோபம், வஞ்சம்.

கக. மூவகைத்தானம்—உத்தமதானம், மத்திமதானம், அதமதானம். உத்தமதானம்-தருமவழியாற் சம்பாதித்துப் பேணிவைத்திருக்கும் பொருளை மனமடங்கி நோற்குந் தவமுடையாரிருக்குமிடத்திற் சென்று பெற்றுக்கொள்க என்று குறையிரந்து மகிழ்ந்து தாழ்ந்து கொடுத்தல்.

கஉ. மத்திமதானம்—அங்கக்குறைவுடையோர்க்கும், பெண்களுக்கும், செவிடர்க்கும், வறியவர்களுக்கும் கொடுத்தல்.
அதமதானம்—அன்பு,புகழ்,கண்ணோட்டம், அச்சம், கைம்மாறு, பிறிதுகாரணம் என்னும் இவைபற்றிக் கொடுத்தல்.

கங. திரிகடுகம்—சுக்கு, திப்பலி, மிளகு.
திரிபலை—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்.
திரிபுரம்—பொன்மதில், வெள்ளிமதில், இருப்புமதில்.
சூரியனுக்குரியமூவகைவீதி—மேடவீதி, இடபவீதி, மிதுனவீதி. [மேடவீதி - இடபம், சிங்கம், மிதுனம், கர்க்கடகம். இடபவீதி - மீனம், மேடம், கன்னி, துலாம். மிதுனவீதி - தனு, மகரம், கும்பம், விருச்சிகம்.]

கச. நால்வகைநிலம்—முல்லை, குறிஞ்சி, நெய்தல், மருதம்.
நாற்கதி—தேவர், மனுடர், விலங்கு, நரகர்.
நால்வகையங்கம்—யானை, தேர், குதிரை, காலாள்.

கரு. நால்வகையிழிசொல்—குறளை, பொய், கடுஞ்சொல், பயனில்சொல்.
நால்வகைவேதம்—இருக்கு, யசுர், சாமம், அதர்வம்.

கசு. நால்வகைப்பொருள்—அறம், பொருள், இன்பம், வீடு.
நால்வகைக்கேள்வி—இந்நான்கினையுமுணர்த்தும் நூல்களைக் கேட்டல். நால்வகையரண்—காடு, மலை, நீர், மதில்.
ஆடவர்க்குரியநால்வகைக்குணம்-அறிவு,நிறை,ஓர்ப்பு, கடைப்பிடி.

கஎ. பெண்களுக்குரியநால்வகைக்குணம்—நாணம், மடம்,அச்சம், பயிர்ப்பு. நால்வகைப்புண்ணியத்தோற்றம்—தவம், ஒழுக்கம், கொடை, கல்வி இவற்றை உடையராய்ப்பிறத்தல்.

சொல்லியசாதருபங்கிளிச்சிறைதுலங்குகின்ற
நல்லவாடகமேசாம்பூநதமிவைநால்வகைப்பொன்
மெல்லியகொடிப்பூக்கோட்டில்விளங்குபூநீர்ப்பூவேறு
புல்லியபுதற்பூவென்னப்பொருந்துநால்வகையிற்பூவாம். (கஅ)

நறைபடவுண்பதின்பநக்குவபருகனுன்காம்
எறிதலேகுத்தல்வெட்டலெய்தனுன்கூறுபாடாம்
முறைபடுசாமம்பேதமுந்தியதானந்தண்டம்
நெறிபடுமுபாயநான்குநிருபர்தம்முறைமையாமே. (கக)

துவமதாங்குடற்போர்வைக்குட்டொடர்புறமுட்டைதன்னில்
நவையறுநிலத்தில்வேர்வினல்லுயிர்த்தோற்றநான்காம்
கவியொடுகமகன்வாதிகாசிலாவாக்கியென்ப
புவியின்மேனுல்வகைத்தாம்புலமையரியல்புதானே. (உ0)

தீட்டியவாசிரேனுடுமதுரஞ்சித்திரம்வித்தாரப்
பாட்டிவையாருமெச்சப்பாடுவோன்கவியென்ருகும்
நாட்டியவரும்பொருட்கள்செம்பொருணடையவாகக்
காட்டியேவிவகரிப்போன்கமகனென்றறையலாமே. (உக)

ஏதுவுமேற்கோளுந்தானெடுத்துடன்காட்டியாங்கே
வாதினிற்பிறன்கோளெல்லாமறுப்பவன்வாதியென்ப
ஓதியவறம்பொருட்களுற்றிடுமின்பம்வீடு
கோதின்றிக்கேட்கவேட்கக்கூறுவோன்வாக்கியாமே. (உஉ)

கொடுத்திடும்பொருளின்மற்றுக்கூறியவினத்திற்கோட்டி
அடுத்திடுமெப்போதப்போதசைவின்றியாருமெச்ச
எடுத்தியல்பாகப்பாடுமெவனவனுசுசொல்வான்
வடுப்பிளவனையவொண்கண்மடமொழிவல்லிநல்லாய். (உங)

பொருளினிற்பொலிவுஞ்சொல்லிற்பொருந்தியபொலிவுமற்றைத்
தருதொடைதொடைவிகற்புந்தாந்துறைதந்தமிர்தமூற
உருவகமுதலாவைத்தேயோதியவலங்காரத்தோ
டிருளறவோசைதோன்றியிருந்ததுமதுரமாமே. (உச)

சொற்றிடுமாலைமாற்றேசுழிகுளமேகபாதம்
குற்றமில்சக்கரத்தின்கூறெழுகூற்றிருக்கை
கற்றிடுமடிமயக்குக்காட்டும்பாவின்புணர்ப்போ
டொற்றெழுத்தியாவுந்தீர்ந்தவொருபொருட்பாட்டினேடும். (உரு)

௧௮. நால்வகைப்பொன்—சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம். நால்வகைப்பூ—கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, புதற்பூ.

௧௯. நால்வகையுணவு—உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன.
நால்வகையூறுபாடு—எறிதல், குத்தல், வெட்டல், எய்தல்.
நால்வகையுபாயம்—சாமம், பேதம், தானம், தண்டம்.

௨0. நால்வகையுயிர்த்தோற்றம்—கருப்பையிற்றோன்றுவது, முட்டையிற்றோன்றுவது, வித்துவேர்முதலியவைகளை மேற்பிளந்து தோன்றுவது, வேர்வையிற்றோன்றுவது.
நால்வகைப்புலவர்—கவி, கமகன், வாதி, வாக்கி.

௨௧. கவியாவான்—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் யாவரும் வியக்கும்படி பாடுவோன்.
கமகனாவான்—அரும்பொருட்களைச் செம்பொருளுடையனவாகக்காட்டி விவகரிப்போன்.

௨௨. வாதியாவான்—ஏதுவும் மேற்கோளும் எடுத்துக்காட்டிவாதித்துப் பிறன்கொள்கையை மறுப்பவன்.
வாக்கியாவான்—அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப்பொருளையும் யாரும் விரும்பிக்கேட்குமாறு குற்றமறக் கூறுவோன்.

௨௩. ஆசுகவி—சபையிலே ஒருவனாற் கொடுக்கப்பட்ட பொருள், பாட்டு அடி முதலியன அமையும்படி விரைந்து பாடவல்லோன்.

௨௪. மதுரகவி—பொருட்சிறப்பும் சொற்சிறப்பும் தொடையும் தொடைவகைகளும்நெருங்கி, உருவகமுதலிய அலங்காரங்களும் ஓசையுந்தோன்றும்படி பாடவல்லோன்.

௨௫. சித்திரகவி—மாலைமாற்று, சுழிகுளம், ஏகபாதம், சக்கரவகை, எழுகூற்றிருக்கை, பாதமயக்கு, பாவின்புணர்ப்பு, ஒற்றெழுத்தில்லாப்பாட்டு, ஒருபொருட்பாட்டு,

